# முடியா? காதலா? சீர்திருத்தமா?

ஆக்கியோர்:

"நவசக்தி" ஆசிரியர்

திருவாளர் - திரு. வி. கலியாணசுந்தரனர்





சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை

சென்னை

1938



விலை
அணா 12

# அணிந்துரை

மக்கள் வாழ்வைப் பண்படுத்தற் கென்று உலகிடை எழுந்த மறைமொழிகள் பல. அவைகளுள் மிக எளிதில் விளங்கக் கூடியதா யிருப்பது கிறிஸ்துவின் மலைப்பொழிவு. அப் பொழிவில் ஓர் அறிவுறுத்தல் உயிரெனத் திகழ்கிறது. அது, 'தீமையை எதிர்த்து நில்லாதே' (Resist not the evil) என்பது. அஃது ஒன்றும் வாழ்வில் விளையும் நலன் அளப்பரிது.

'தீமையை எதிர்த்து நில்லாமை' என்னும் பேரறத்தைக் கடைப் பிடித்து ஒழுகுவோர் ஆண்டவன் பிள்ளைகளாவர். அவர் செயற்கருஞ் செயல் செய்வர். ஆண்டவன் பிள்ளையாதற்கு வாழ்வைத் துறக்க வேண்டுவதில்லை; கோலத்தை மாற்ற வேண்டுவதில்லை; காட்டுக்கு ஓடவேண்டுவதில்லை; மூக்கைப் பிடிக்க வேண்டுவதில்லை; உடலை ஒறுக்க வேண்டுவதில்லை; 'தீமையை எதிர்த்து நில்லாத' பயிற்சி ஒன்று சாலும்.

தீமையை எதிர்த்து நில்லாது வாழ்வு நடாத்துவோரே மனிதரில் மனிதராவர். அவரே பெரியர்; உலகுக்கு வழி காட்டுந் தகுதி வாய்ந்தவர். அப்பெரியர் சிலரை என் வாழ்வில் பார்க்கும் பேறு பெற்றிருக்கிறேன். அவர்தம் வாழ்வு எனது உள்ளத்தைக் கவர்வது வழக்கம். காரணம் எனக்கே விளங்குவதில்லை.

எட்வர்டைத் தீமைகள் சூழ்ந்தன; முட்டின. அவர் அவைகளை எதிர்த்தாரில்லை. அவர் தியாகத்திற் கருத்தைச் செலுத்தி முடி துறந்தார். எட்வர்ட் முடி துறந்த செய்தி பத்திரிகை வாயிலாகவும், பிறவாயிலாகவும் யாண்டும் பரவலாயிற்று. அச்செய்தியை முதல் முதல் யான் பத்திரிகையில் படித்தபோது, அஃது எனது உள்ளத்தைக் கவர்ந்தது.

எட்வர்டின் துறவு நிகழ்ச்சி குறித்து என்னுள்ளத்தில் பலவித எண்ணங்கள் எழுந்தன. அவைகளை எனது அருமை 'நவசக்தி'யில் வரிவடிவில் வாரந்தோறும் வடித்து வந்தேன். எண்ணங்கள் பல கட்டுரைகளாயின. அக்கட்டுரைகளைக் கொண்டதே இந்நூல். கட்டுரைகளை ஒழுங்குபடுத்தி நூன்முறையில் ஒருவாறு செப்பஞ் செய்யலானேன். நூலின் உள்ளுறைக் கேற்ப நூலுக்கு "முடியா? காதலா? சீர்திருத்தமா?" என்னுந் தலைப்புச் சூட்டப்பட்டது.

இந்நூல் எட்வர்டின் துறவு வரலாற்றைப் பற்றி நிரலே கிளந்து கூறுவதன்று. இஃது அத்துறவைப் பற்றிய ஓர் ஆராய்ச்சி நூல். 'தீமையை எதிர்த்து நில்லாமை' என்னுஞ் சீரிய கொள்கை பரவுதல் வேண்டுமென்னும் நோக்குடன் இந்நூல் எழுதப்பட்டது.

எட்வர்ட் துறவைப் பற்றிப் பல பத்திரிகைகளிற் போந்த செய்திகளும், அத்துறவின் வரலாற்றைப் பற்றிய சில நூல்களுமே எனது ஆராய்ச்சிக்குக் கருவிகளாகத் துணை செய்தன. பத்திரிகைகளில் தப்புச் செய்திகள் வருதலும் உண்டு. சில செய்திகள் எனக்கு ஐய மூட்டின. அவைகளை ஆராய்ச்சிக்கு யான் எடுத்துக் கொள்ளவில்லை. இனிப் பொய்மை என்று உறுதிப்படுஞ் செய்திகள் காணப்படுமேல், அவைகளைப்பற்றிய ஆராய்ச்சிக் குறிப்புக்கள் மறு பதிப்பில் விலக்கப்படும்.

நூற்கண் போந்துள்ள லார்டுகள், பிஷப்புக்கள், அமைச்சர்கள் முதலியோர் மீது எனக்கு எவ்விதக் காழ்ப்போ பகைமையோ இல்லை. நிகழ்ச்சிகளை யொட்டியே என் கருத்துக்களை ஆராய்ச்சி முறையில் வெளியிட்டுள்ளேன். ஆராய்ச்சி, பெரிதும் கிறிஸ்துவின் 'சுவிசேஷ' உலகினின்றுமே செய்யப்பட்டதென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெண்ணின்பம், அரச இன்பம், காதற்றிறம், கற்புநிலை, நாட்டின் வழக்க வொழுக்கங்கட் கேற்ற முறையில் குணங்குற

றங் கோடல், உரிமையின் விழுப்பம், மணவிலக்கும் சட்டதிட்டமும், சீலவகை, பழம் பிறப்புணர்வு, விதியை வெல்கை, சமநோக்கு, சமதர்மம், செல்வர் புரோகிதர் சிறுமை, ஜனநாயக இழிவு, உலக வாழ்வின் நுட்பம், சாத்தான் உலகம், கிறிஸ்து உலகம், பாவமன்னிப்பு, தியாகத்தின் வெற்றி, வாழ்வில் வெற்றி, பணிச்சிறப்பு, காதல் மணம், இயற்கை வாழ்வு, சீர்திருத்தம் முதலிய செம்பொருள்கள் நூலிடை மிளிர்கின்றன.

என் வாழ்வில் இச்சிறு நூல் எழுதல் நேர்ந்தமை குறித்து மகிழ்வெய்துகிறேன். அவ்வாய்ப்பை எனக்கு அருளிய இறைவனை மனமொழி மெய்களால் இறைஞ்சுகிறேன்.

இராயப்பேட்டை
சென்னை
25—1—1938

திருவாரூர் - வி. கலியாணசுந்தரன்.

# உள்ளுறை



# முடியா? காதலா? சீர்திருத்தமா?

## I தோற்றுவாய்

ஆண்டவன் ஒருவனே பெரியவன். அவனுக்கே எல்லாந் தெரியும். அணுவுக்கு அணுவாயிருப்பவன் அவன். அண்டத்துக்கு அண்டமாயிருப்பவன் அவன். அவனுக்குத் தெரியாத தொன்றில்லை. அகில கோடிகளை யெல்லாம் ஆட்டுவோன் அவன். அவன் ஆட்ட எல்லாம் ஆடும். 'அவனன்றி ஓரணுவும் அசையாது.'

ஒவ்வொரு நொடியும் - ஒவ்வொரு பொழுதும் - எத்துணையோ காரியங்கள் நிகழ்கின்றன! அவைகளை யெல்லாம் அளந்து கூறுதல் எவரால் இயலும்! அவைகளிற் பெரியன சில; சிறியன சில; வெளிவருவன சில; வெளி வாராதன சில. 1936-ம் ஆண்டின் இறுதியில் உலகில் ஒரு பெரும் நிகழ்ச்சியுற்றது. அஃதென்னை? ஒரு பெரிய சாம்ராஜ்யத்துக்குத் தலைமை பூண்டிருந்த ஒருவர் அத்தலைமைப் பதவியை நொடிப் பொழுதில் துறந்தமை யாகும். அத்துறவால் ஒருவித வியப்பும் விழிப்பும் உலகில் தோன்றியுள்ளன.

அப்பெருந் துறவுக்குரிய காரணமென்னை? புறக் காரணஞ் சில இருக்கலாம்; அகக் காரணஞ் சில இருக்க

லாம். ஒரு பெரிய சாம்ராஜ்ய நிகழ்ச்சியைப் புறத்தள வில் ஆராய்ந்து எளிதில் விடுதல் கூடாது. அதன் அகத் தையுந் துருவித் துருவி ஆராய்ந்து நோக்குதல் வேண் டும். அதனால் பலதிற வாழ்வு நுட்பங்கள் தெளிவாகும். அத்தெளிவு வாழ்வுக்குத் துணை புரிவதாகலாம்.

ஒவ்வொரு நிகழ்ச்சி ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு விதமாகத் தோன்றும். ஒருவர்க்கு நல்லதாகத் தோன் றுவது மற்றொருவர்க்குத் தீமையாகத் தோன்றும். அவர்க்குத் தீமையாகத் தோன்றுவது இவர்க்கு நல்ல தாகவுந் தோன்றும். இஃது உலக இயல்பு. மாறுபட்ட உணர்வுக்கு முடிவு உண்டோ? உண்டு. எப்பொழுது? மெய்யுணர்வு தோன்றும்வரை ஐயந்திரிபு மயக்கத்துக்கு இடம் உண்டு. மெய்யுணர்வு தோன்றியதும் உண்மை விளங்கும். அப்பொழுது மாறுபட்ட உணர்வு மாய்ந் தொழியும்.

## அப்பர்

ஒரு பெரும் சாம்ராஜ்யத்தைத் துறந்தவர் உலகறிந் தவர். அவர்தம் வரலாற்றை விரித்துக் கூறவேண்டுவ தில்லை. வாழ்வின் பண்புக்குரிய முறையில் - அளவில் - அத்துறவைப்பற்றிச் சுருக்கமாகச் சிந்திக்க முயல்கி றேன். அம்முயற்சியில் தலைப்படும் இவ்வேளையில் தமிழ்நாட்டிற் றோன்றிய ஒரு பெரியார் திருவாக்கின் மீது எனது கருத்துச் செல்கிறது. அத் திருவாக்கு வருமாறு:—

"கனியி னுங்கட்டி பட்ட கரும்பினும்
பனிம லர்க்குழல் பாவைநல் லாரினும்

"தனிமுடி கவித் தாளும் அரசினும்
இனியன் தன்னடைந் தார்க்கிடை மருதனே"

இஃது அப்பர் திருவாக்கு.

பாட்டின் பொருள் வெளிப்படை. கனியைப் பார்க்கிலும், கற்கண்டைப் பார்க்கிலும், பெண்ணைப் பார்க்கிலும், அரசைப் பார்க்கிலும் இனிமை யுடையவன் இறைவன் என்பது திரண்டகருத்து. பொருண் முறை வைப்பை நோக்குக. இனிமை படிப்படியாக உயர்ந்து செல்வதையும் உன்னுக. குறிப்பிட்ட பொருளெல்லாம் இனிமை யுடையன. இனிமையில் படித்தரம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஈண்டு நமக்கு வேண்டும் இனிமை இரண்டு. ஒன்று பெண்ணினிமை; மற்றொன்று அரசினிமை. இரண்டில் விழுமியது எது?

பெண்ணின்பத்துக்கு அடுத்தபடியாகக் கடவுளின்பத்தைச் சொல்வது உலக வழக்கு. கவிவாணர் பலரும் அவ்வாறே பாடிச் சென்றனர். அப்பரெம்பெருமான் பெண்ணுக்குங் கடவுளுக்கும் இடையில் 'தனிமுடி கவித் தாளும் அரசை' நுழைத்துள்ளார். அப்பர் உள்ளக் கிடக்கை அப்பருக்கே தெரியும். எக்கருத்துக் கொண்டு அப்பர் அப்பாட்டை யருளினரோ? அதை யாவர் அறிவர்? அவரவரது கல்வி அறிவு ஒழுக்கம் ஆராய்ச்சி அநுபவம் முதலியன ஒன்றி, அவரவர்பால் முகிழ்ப்பித்துள்ள மனங்கொண்டு, அப்பர் திருவாக்கை முன்னிப் பார்க்கவேண்டுவது அவரவர் கடமை.

"ஒருவன் பெண்ணின்பத்தை விடினும் விடுவான். பதவி இன்பத்தை - அதினும் தனி முடி கவித்தாளும் அரசின்பத்தை - தானே விடான். ஆகவே பெண்

ணின்பத்தினும் தனிமுடி கவித்தாளும் அரசின்பமே சிறந்தது" என்பது அப்பர் உள்ளக்கிடக்கை என்று கூறுவோருமிருப்பர். "குழந்தைக்கு இனிமை கனியிலும் கற்கண்டிலும்; இளங் காளைக்கு இனிமை பெண்ணில்; பதவி வேட்டார்க்கு இனிமை அரசில். உண்மை இனிமை இவைகளிலில்லை. இனிமைக்கெல்லாந் தாயகம் இறைவனடி. அதைப் பற்றுவதே சிறப்பு. அவ்விடத்துள்ள இனிமையே கனி முதலியவற்றிலிருப்பது" என்று அப்பரைக் காண முயல்வோருமிருப்பர். "கனியுங் கற்கண்டும் அவரவர் அளவில் இன்பம் பயப்பன. பெண்ணால் ஈருயிர் இன்பம் நுகர்கின்றன. அரசால் பல்லுயிர் இன்பம் பெறுகின்றன. எங்குமுள்ள இறைவனை அடைந்தோரால் எவ்வுயிர்க்கும் இன்பம் விளையும்" எனனுங் கருத்துப் படிப்படியாகப் பொதுளி வருமாறு அப்பர் அருளினர் என்று சொல்வோருமிருப்பர். இன்னும் பலவாறு உரைப்போருமிருப்பர். அப் பலபட்ட உலகிடை-இப்பொழுது - இங்கே - புகவேண்டுவதில்லை. அணித்தே நேர்ந்த சாம்ராஜ்யத் துறவின் நுட்பமுள்ள இடத்தைத் தெரிந்து கொள்ளுதற்கு அப்பர் திருவாக்கை ஒரு கலங்கரை விளக்கமாகக் கொள்ளலாம்.

## பெண்ணின்பமா? அரசின்பமா?

பெண்ணின்பம் பெரிதா? அரசின்பம் பெரிதா? இதற்கென்ன பதிலிறுப்பது? கேள்வி மிகச் சிக்கலானது; ஒவ்வொருவர் ஒவ்வொருவிதப் பதிலிறுக்குந் தன்மை வாய்ந்தது. பதில் அவரவர் மனோ நிலையைப்

பொறுத்தது. பெண்ணின் சார்பினருமிருக்கலாம்; அரசின் சார்பினருமிருக்கலாம்.

எனது கருத்து என்னை என்று நேயர்கள் வினவலாம். எனது விடை சிந்தனைக்குரியதாயிருக்கும். 'இன்பத்தில் பெருமையுமில்லை; சிறுமையுமில்லை. இன்பம், அதனை நுகர்வோன் மனோநிலையைப் பொறுத்துநிற்பது' என்பது எனது முதல் விடை; இரண்டாவது, 'பெண்ணின்பம் இல்லையேல் அரசின்பம் இல்லை' என்பது. 'அரசின்பம் மட்டுமா - இறையின்பமுமில்லை' என்றுங் கூறுவேன். பெண்ணினிமையைப் புலன்களால் பருகாத ஒருவன் அரசனாயிருப்பதற்கோ, இறைவன் அடியவனாயிருப்பதற்கோ அருகனல்லன். அவன், அன்பின் தன்மை இன்னதென்றறியாத கொடியனாய் அரக்கனாயிருப்பன். பெண்ணினிமையை நுகராத ஒருவன், அரச இனிமையையோ இறை இனிமையையோ எங்ஙனம் நுகரவல்லான்?

ஒரு பெரும் சாம்ராஜ்யத்தைத் துறந்த ஒருவரைப் பற்றியது இந்நூல். அவர் எக்காரணம்பற்றித் 'தனி முடி கவித்தாளும்' அரசினைத் துறந்தார்? உன்னுங்கள்; உன்னி உன்னி உண்மையுணர முயலுங்கள். 'இனிமைப் பெண்ணேனுங் கனி என்னிடமின்றி யான் எங்ஙனம் அரசாள்வேன்' என்றன்றோ அவர் அறைந்து அரசைத் துறந்தார்? இஃது அறமொழியா? மறமொழியா? இஃது அறமொழி; ஆண்டவன் மொழி என்றுந் தோன்றுகிறது. இப்பெருநோக்குடைய மன்னரைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இழந்ததே என்று

வருந்துகிறேன். அவர் ஆண்டவன் ராஜ்யத்தில் வாழ்கிறார். அவர் வாழ்க. அவர்வழி வெல்க.

## எப்பெண்?

'பெண்ணெனுங் கனி வாழ்வுக்கு வேண்டற்பாலதே. ஆனால் பெண்ணெனில் எப்பெண்? கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ? இருவரை மணந்து விலகிய ஒரு பெண்ணையா ஓர் அரசர் நாடுவது?' என்று உலகங் கேட்கும். எவ்வுலகங் கேட்கும்? பால்டுவின் உலகங் கேட்கும்; பாதிரி உலகங் கேட்கும். 'உலகமென்பது உயர்ந்தோர்மாட்டு' என்னும் பொருளுடைய உலகங் கேட்குமோ? காதல் இன்னது என்றுணர்ந்த கடிமண உலகங் கேட்குமோ?

காதல் என்பது தெய்வத் தன்மை வாய்ந்தது. அது காமமன்று. காதல் கடலினும் பெரிது; மலையினும் பெரிது; உலகினும் பெரிது; அகிலத்தினும் பெரிது. அதற்கு ஈடுமில்லை; எடுப்புமில்லை. காதல் எல்லையற்றது. அதற்கு அகலமுமில்லை; நீளமுமில்லை. காதலின் மாண்பை அறிவார் யார்? காதலரே காதல் பெற்றியை உணர்வர். காதலுக்கு முன்னே, கல்வி என்ன-செல்வம் என்ன - சீர் என்ன - சிறப்பென்ன - பதவி என்ன - பட்டம் என்ன - அரசு என்ன - சாம்ராஜ்யம் என்ன - எல்லாஞ் சிறுமை! சிறுமை! காதலுக்குக் காதலே ஈடும் எடுப்பும். காதலுக்குக் காதலே பெருமை. காதலரிடம் காதலே வீறுகொண்டு நிற்கும். ஏனைய இரிந்தோடும்.

"வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின் [க்
துளைவழி நேர்கழி கோத்தெனத் தில்லைத்தொல் லோன்கயிலை
கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண்ணியைக் கொண்டுதந்த
விளைவை யல்லால்விய வேனய வேன்றெய்வ மிக்கனவே"

இத்திருக்கோவைப் பாட்டைப் பார்க்க. இப்பாட்டின் கருத்தாதல் பால்டுவின் உலகினது நெஞ்சில் நின்றிருக்குமா? வறட்டு உலகின் கொடுமை என்னே! என்னே!

'இருவரை மணந்து விலகிய ஒருத்தி காதற் கனியாவளோ?' என்பதே புல்லிய உலகைக் கலக்கியிருக்கிறது. வின்ஸர் கோமகளார் மேல்நாட்டுப் பெண்மணி. அவ்வம்மையார் செயலை மேல்நாட்டு வழக்க வொழுக்கக் கண்கொண்டே பார்த்தல்வேண்டும்.

ஒரு நாட்டில் புலாலுண்ணாத மரபில் தோன்றிய ஒருவனிருந்தான். புலாலுண்ணாமையே கடவுளுக்கு அன்பு செய்தல் என்று அவன் எண்ணி வந்தான். அந் நாட்டில் மற்றோரிடத்தில் இன்னொருவனிருந்தான். அவன் புலாலுண்பவன். 'புலாலுண்ணாமை அறம்' என்பதே அவனுக்குத் தெரியாது. அவனும் ஆண்டவனுக்கு அன்பன். அவன் அன்பை ஆண்டவன் ஏற்று அவனுக்குப் பல வழியிலும் அருள் புரிந்தான். ஆண்டவனருளால் அப்புலையன் செயற்கருஞ் செயல்களெல்லாஞ் செய்யலானான். அதைக் கேள்வியுற்ற புலாலுண்ணாத அன்பன், 'இஃதென்ன ! புலாலுண்போனுக்கு ஆண்டவன் அருள்செய்வது. அவ்வாண்டவன் நல்லவனல்லன்' என்று ஆண்டவனையே கடியத் தொடங்கினான்.

'புலாலுண்ணாமை அறம்' என்பதையுணர்ந்த மரபில் தோன்றி அவ்வழி நடப்போன் ஒருவன். அதை முற்றும் உணராத மரபில் தோன்றியவன் இன்னொருவன். அவன் இவன் செயலை வெறுக்கிறான். இஃது உலக இயல்பு போலும் !

ஒருவர் நிலையை மற்றொருவர் உணராமலும், ஒரு சமூகப் போக்கை வேறொரு சமூகம் உணராமலும், ஒரு நாட்டார் வழக்க வொழுக்கங்களை இன்னொரு நாட்டார் உணராமலும், ஒருவரை மற்றொருவரும், ஒரு சமூகத்தை வேறொரு சமூகமும், ஒரு நாட்டாரை இன்னொரு நாட்டாரும் நிந்தித்துக் கூறுவது தவறு. அவரவர் நிலையை - அவ்வச் சமூகப் போக்கை - அவ்வந்நாட்டார் வழக்க வொழுக்கங்களை - நேரிலுணர்ந்தோ, நூல்கள் வாயிலாகத் தெரிந்தோ, மற்றவர்பால் கேட்டோ - தெளிவடைந்த பின்னரே மக்கள் செயல்களைப்பற்றி முடிவு கூறுதல் அறம். ஒன்றையும் உணராது வாயில் வந்தவாறு உளறுவது அறமாகாது. ஆகவே மேல்நாட்டுச் சமூகவழக்கம், ஒழுக்கம், சட்டம் முதலியவற்றைக் கொண்டே வின்ஸர் கோமகளாரது நிலையை அளந்து கூறுவது நியாயம். அவ்வழி விடுத்து, ஒரு பெண்மணிமீது பழி பாவங்களைச் சுமத்துவது நியாயமாகாது.

# II நாகரிகமும் உரிமையும்

உலக நாகரிகம் பலபட்டது. நாகரிகம் என்பது அவ்வந்நாட்டு இயற்கைக்கேற்றபடி அமைவது. அஃது எங்கும் - என்றும் - ஒரு பெற்றியாயிராது. ஓரிடத்தில் ஒருபோது அமைந்த நாகரிகம் மற்றொருபோது அவ் விடத்திலேயே மாறுதல் அடையினும் அடையும். கால தேச வர்த்தமானச் சுழற்சியால் மாறுதல் நேர்வது இயல்பு. மாறுதல்மட்டும் இயற்கைக்கு அரண்செய்வதா யிருத்தல் வேண்டும்; இல்லையேல் மாறுதல், தீமை - கலாம் முதலியவற்றை விளைத்து வீழ்ந்துபடும்.

நாகரிகம் எத்துறையில் அமையினும் அமைக. அதன்கண் இடையிடை எத்தகை மாறுதல் நேரினும் நேர்க. நாகரிகமென்று சொல்லப்படுவதில் மட்டும் இரண்டு உயிர்நாடிகள் ஓடிக்கொண்டிருத்தல் வேண்டும். அவை கண்ணோட்டம், உரிமை என்பன. அவ்விரண்டும் அற்ற ஒன்று எத்தகையதாயினும் அது நாகரிகமாகாது.

நாகரிகக் கூறுகள் பல. அவைகளில் ஒன்று - சிறந்த ஒன்று - பெண்ணுரிமை. பெண்ணுரிமையி னின்றும் அரும்பி மலர்வது நாகரிகம். ஒரு நாடு நாகரி கம் உடையதா அன்றா என்பதை அந்நாட்டின் பெண் மக்கள் நிலைகொண்டு அளந்து கூறுதல்கூடும். பெண் ணுரிமையுள்ள நாடே நாகரிகம் வாய்ந்தது.

பண்டைநாளில் உலகம் முழுவதும் பெண்ணு ரிமை பெற்றிருந்தது. பின்னை நாளடைவில் சிற்சில

இடங்களில் பெண்ணுரிமைக்குக் கேடு சூழப்பெற்றது. மேல்நாட்டு நாகரிகத்தில் பெண்ணுரிமை பொலிவது கண்கூடு. அவ்வுரிமை அந்நாகரிகத்திலுள்ள சில சிறுமைகளையும் மறைத்து நிற்கிறது. பெண்ணுரிமை மேல் நாட்டு நாகரிகத்தைப் பல வழியிலும் அணிசெய்கிறது.

நாகரிக வாழ்வுக்கு உயிர்போன்றது திருமணம். அத்தகைத் திருமணத்தில் ஈடுபடுவோர்க்கு உரிமை இருத்தல் வேண்டுமா? வேண்டாமா? அத்துறையில் உரிமை இல்லையேல் வாழ்வு பாழாகும். திருமணத்தில் உரிமை பெறாத சமூகமோ நாடோ எதுவோ ஆக்கம் பெறாது சாம்பி னைந்து ஒழிந்து போகும்.

திருமணத்தின் அடிப்படை காதல். காதலற்ற சேர்க்கை மணமாகாது. அது சொன்மணம் - வெறு மணமாகும். காதல் உரிமையில் எழுவதா? அடிமையில் எழுவதா? கட்டற்ற உரிமை யுணர்வினின்றும் எழுவதே காதல். அக்காதலால் பிணைபடும் ஈருயிர்களிடைப் பிரிவு நேர்தல் அரிது. அப்பிணை எழுமையிலுந் தொடர்ந்துவரும் ஆற்றல் வாய்ந்தது.

## சட்ட திட்டம்

முன்னை நாளில் மன்பதையில் காதல் மணமே பெரிதும் நடைபெற்று வந்தது. பின்னே அம்மணத்துக்குப் பலதிற இடர்கள் நேர்ந்தன. இடர் விளைத்தது ஆணுலகமேயாகும். பொய்யும், வழுவும் ஆணுலகிற் புகுந்தன. அதனால் திருமணத்தில் சட்டதிட்டங்கள் நுழைந்தன. சட்டதிட்டங்கள் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக வகுக்கப்பட்டன.

ஈண்டு எடுத்துக் கொண்ட பொருள் மேல்நாட்டைப் பற்றியது. அந்நாட்டுச் சட்டதிட்ட வழக்க வொழுக்கங்களை ஒட்டியே அந்நாட்டு நிகழ்ச்சியை ஆராய்வது நியாயம். அங்கே, 'இவள் இவனை - இவன் இவளை - மணஞ் செய்து கொள்ளல்வேண்டும்' என்னும் நியதி இல்லை. ஒருத்தி தான் விரும்பும் ஒருவனை - ஒருவன் தான் விரும்பும் ஒருத்தியை - மணஞ்செய்து கொள்ளலாம். மணஞ்செய்யும் முறைக்கு மட்டுஞ் சட்டதிட்டங்கள் கோலப்பட்டிருக்கின்றன.

காதல் வழி மணஞ்செய்து கோள்ளும் உரிமையே போற்றற்குரியது. உரிமைகளுள் உயிர் போன்றது அதுவே. அவ்வுரிமை சில இடங்களில் பாழ்பட்டுக் கிடக்கிறது. அவ்விடங்களும் பாழ்பட்டு நாறுகின்றன.

ஒருத்தியும் ஒருவனும் தாம் விரும்பியவாறே மணஞ்செய்து கொள்வதற்கு மேல்நாடு உரிமை வழங்கியுள்ளது. இருவரும் விரும்பினால் பிரிதற்கும் அந்நாடு உரிமை வழங்கியிருக்கிறது. பிரிவுக்கென்று சட்ட திட்டங்களுஞ் செய்யப்பட்டிருக்கின்றன. சட்டதிட்டங்களின்படி வாழ்வு நடாத்த மக்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள். குறைபாடுகளிருப்பின், அவை சட்ட திட்டங்களைப் பொறுத்தனவேயன்றி, மக்களைப் பொறுத்தன வாகா.

மணக்கூட்டை இடையில் உடைத்துக் கொள்வது அறமா மறமா என்னும் ஆராய்ச்சி ஈண்டைக்கு வேண்டுவதில்லை. இது பற்றிப் 'பெண்ணின் பெருமை' என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன். விரிவு ஆண்டுக் காண்க. ஒரு நாட்டில் வாழ்வுக்கென்று நிறுவப் பெற்ற

சட்டதிட்டங்கள் நேரிய முறையில் ஆளப்படுகின்றனவா இல்லையா என்னும் ஆராய்ச்சியே ஈண்டைக்கு வேண்டுவது.

தனது வழக்க வொழுக்கங்கட் கேற்பச் சட்டதிட்டங்கள் கோலிக்கொள்ளும் ஒரு நாடு, அச்சட்டதிட்டங்களின்படி நடந்தே தீர்தல்வேண்டும். சட்டதிட்டங்கட்கு மதிப்புக் கொடுப்பதில் கீழ்நாட்டைப் பார்க்கிலும் மேல்நாடு பேர் பெற்று விளங்குவது. 'சட்டதிட்டமே' மேல் நாட்டவர்க்குத் தெய்வம் என்றுஞ் சொல்லலாம்.

மண விலக்கையும் மறுமணத்தையும் மேல் நாடு பழிப்பதில்லை; அவைகளை இழிவாகவுங் கருதுவதில்லை. பெண்ணுரிமைக்கு நிலைக்களனாயிருப்பது தற்போதைய மேல்நாடு. அங்கே மணவிலக்கு உரிமையும் உண்டு; மறுமண உரிமையும் உண்டு. அவ்வுரிமை அங்கே எல்லார்க்கும் பொதுவாயிருப்பது. பொதுவாய உரிமையின் பத்தைக் குறிப்பிட்ட சிலர் மட்டும் நுகராத முறையில் கேடுசூழ்வது நியாயமாகுங்கொல்! ஒருபோதும் நியாயமாகாது. நாகரிக உலகம் அதை 'அநியாயம்! அநியாயம்!' என்றே எள்ளும். திரு. பால்டுவின் செய்த தவறு-அவர் தம் அரசாங்கஞ் செய்த தவறு - இங்கிலாந்தையே பாதிக்கிறது; மேல் நாட்டையே பாதிக்கிறது; நீதியுலகத்தையே பாதிக்கிறது. ஆணவம் பின்னே நோய் செய்யாமற் போகாது.

## சட்டமும் அரசினரும்

சட்டம் நாட்டுக்கென்றே செய்யப்படுகிறது. தோட்டி முதல் தொண்டைமான் வரையுள்ள எல்

லாருஞ் சேர்ந்த ஒன்றே நாடு என்பது. தோட்டியும் ஒரு விதக் கடமையைச் செய்கிறான்; தொண்டைமானும் ஒருவிதக் கடமையைச் செய்கிறான். சட்டம் எல்லார்க்கும் பொதுவாகவே செய்யப்படுகிறது. அதை ஒருவர்க்கு ஒருவிதமாகவும் மற்றொருவர்க்கு இன்னொரு விதமாகவும் பயன்படுத்தலாகாது. சட்டத்தை நேரிய நீதி வழியில் பயன்படுத்தும் நாட்டில் நாகரிகத் தெய்வம் தாண்டவம் புரியும். மற்ற நாட்டில் அத்தெய்வம் தாண்டவம் புரிதல் அரிது.

சட்டஞ் செய்வோர் அரசினர். அரசினரே சட்டத்தின் வழிநின்று ஒழுகிக் காட்டுவது சிறப்பு. அவரே சட்டத்தைப் புறக்கணித்தால் நாடென்னாகும்? வேலியே பயிரை மேய்ந்த கதையாகும்.

இங்கிலாந்தில் மண விலக்குக்கும் மறு மணத்துக்குஞ் சட்டதிட்டங்களிருக்கின்றன. அவைகள் ஆட்சியிலும் இருந்துவருகின்றன. மன்னராவார், இருவரை மணந்து விலகிய ஒருவரை மணத்தலாகாது என்று ஏதேனும் விதியுண்டா? மணம் என்பது அவரவர் விருப்பத்தினின்றும் எழுவதன்றோ? அதில் பிறர் தலையிடுதற்கு உரிமையுண்டா? மன்னரோ மற்றவரோ தாம் தாம் விரும்புமாறு மணஞ் செய்துகொள்ளலாம். தேசச் சட்டத்தை நடைமுறையில் நிகழ்த்திக் காட்டும் பொறுப்பு, மற்றவரைவிட மன்னருக்கு அதிகம் என்று சொல்லவும் வேண்டுமா?

எட்வர்ட் மன்னர் தம் மனம் பற்றிய ஒரு மங்கையை மணம்புரிய விரும்பினர். அதைத் தடுக்கும் உரிமை எவர்க்கு உண்டு? இறைவனுக்கும் அவ்வுரிமையில்லை.

இறைவன் இயற்கைவழி கடனாற்றுவோன். இயற்கைக்கு மாறுபட்டு இறைவனும் நடப்பதில்லை. ஆகவே இயற்கைக் காதலைத் தடுக்கும் உரிமை எவர்க்குமில்லை என்க. அதிகாரத்தாலோ, செல்வாக்காலோ, இன்ன பிறவற்றாலோ காதல் மணத்தைத் தடுப்பது அநாகரிகம். அதிகாரத்தையோ, செல்வாக்கையோ துர்விநியோகப்படுத்தினால் அவ்வதிகாரமோ, செல்வாக்கோ விரைவில் வீழ்ந்துபடும்.

வின்ஸர் கோமகளார் மேல்நாட்டில் (அமெரிக்காவில்) பிறந்தவர்; அங்கே வளர்ந்தவர்; இருவரை மணம்புரிந்து விலகியவர் ; முடி துறந்த எட்டாம் எட்வர்ட் மன்னர் தங் காதலுக்கு உரியவரானவர். இவரை எட்வர்ட் மன்னர் மணத்தலாகாது என்றொரு கட்சி இங்கிலாந்தில் எழுந்தது. இது நாகரிகமாகுமா ? உரிமை யுணர்வாகுமா ?

'எட்வர்ட் ஓர் அரசர். அவர் இருவரை மணந்து விலகிய ஒரு பெண்ணையா மணப்பது ? அப்பெண், அரசியாதல் எங்ஙனம் ? அவள்வழித் தோன்றும் பிள்ளை இளங்கோவாதல் எங்ஙனம் ?' என்று சிலர் எண்ணிய சிறுமை எண்ணமே, எட்வர்ட் முடிதுறப்பதற்கு ஒரு காரணமாகவும் நின்றது. இப்பாழ் எண்ணம் எங்கே பிறந்தது ? எவரிடத்திற் பிறந்தது ? ஏழைமக்களிடத்திலா பிறந்தது ? கல்வியறிவில்லாத மக்களிடத்திலா பிறந்தது ? அந்தோ! அப்பாழ் எண்ணம் 'பெரிய' இடங்களினின்றும் பிறந்தது. அவ்வெண்ணம், பிரபுக்களிடத்தினின்றும் - பிஷப்புக்களிடத்தினின்றும் - அரசை நடாத்தும் அறிஞர்களிடத்தினின்

றும் பிறந்தது. அப்பால் எண்ணம் நாகரிகத்துக்கும் உரிமைக்கும் தளையிடுவதாகும்.

நாகரிகத்துக்கு அறிகுறி உரிமை; அதினும் பெண்ணுரிமை. பெண்ணுரிமை காவாத நாடு, எத்தகையதாயினும், அது நாகரிகமுடையதாகாது. ஒரு மன்னர் தாம் விரும்பிய பெண்மணியை மணந்து கொள்ளும் உரிமை பெருதவாறு கேடு சூழ்வது நாகரிகமாகுமா என்பது உன்னற்பாலது. எட்வர்ட் மன்னரது வாழ்வு நாகரிகத்துக்கும், அதன் பயனாய உரிமைக்கும் ஓர் எடுத்துக் காட்டாக நிற்கிறது.

# III வின்ஸர் கோமகளார்

வின்ஸர் கோமகளாரது வரலாற்றுக் குறிப்புகள் பல பத்திரிகைகளிலும் நூல்களிலும் வந்துள்ளன. அவைகளிற் சிலவே இந்நூலுக்கு வேண்டுவன.

வின்ஸர் கோமகளார் அமெரிக்காவில் மேரிலாண்டிலுள்ள பால்டிமூர் என்னும் பதியில் 1896ஆம் ஜூன்மீ 19உ பிறந்தவர். அவர்தம் தந்தையார் திரு. வாலிஸ் வார்பீல்ட் என்பவர். அவருடைய பெயரை யொட்டியே வின்ஸர் கோமகளார் இளமையில் திருமதி வாலிஸ் என்று அழைக்கப்பட்டார். திருமதி வாலிஸின் கிறிஸ்துவப் பெயர் பெஸ்ஸி என்பது. பெஸ்ஸிவாலிஸ் வார்பீல்ட் என்பது அவரது முழுப்பெயர்.

## குடிப் பிறப்பு

திருமதி வாலிஸ் வார்பீல்ட் பிறந்தகுடி பழமை வாய்ந்தது; பேர் பெற்றது. அக்குடிப்பிறப்பை ஆராய்ந்துழி அஃது ஆங்கில - அமெரிக்கச் சார்பினது என்பது நன்கு விளங்கும். வார்பீல்ட் பெருங்குடி, உரிமை, தியாகம், வீரம், கலை, அரசியல், வாணிபம், ஒப்புரவு, அழகு, பெருந்தகைமை முதலியவற்றால் ஆக்கப்பெற்று வளர்ந்த ஒன்று. அப்பெருங் குடியின் புகழ் மணம் இன்னுங் கமழ்ந்துகொண்டே யிருக்கிறது. அது, திருமதி வாலிஸ் வார்பீல்டால் இப்பொழுது உலகெங்குங் மண்டி நிற்கிறது.

திருமதி வாலிஸ் வார்பீல்டின் முன்னோரது தாய் நாடு இங்கிலாந்து. திரு. பெகன் டி வார்பீல்ட் என்பவர்

வில்லியம் மன்னர் (William the Conqurer) காலத்தில் வாழ்ந்தவர். அவர் ஹேஸ்டிங்ஸ் போரில் ஈடுபட்டவர். அவரால் வார்பீல்ட் குடும்பம் பெருமை பெறலாயிற்று.

திரு. பெகன் டி வார்பீல்ட் குணத்திற் சிறந்தவர்; இராஜபக்தர்; தேசத் தொண்டர். அவர்தம் நற்குணமும், மாசற்ற இராஜ பக்தியும், உண்மைத் தேசத் தொண்டும் மன்னரது உள்ளத்தைக் கவர்ந்தன. மன்னரால் திரு. வார்பீல்டுக்குப் பெருநிலம் வழங்கப்பட்டது.

திரு. பெகன் டி வார்பீல்டின் வழித்தோன்றல்களில் பலர் ஆங்கிலப் பரம்பரையைச் சிறப்பித்தவராவர். அவருள் குறிக்கத்தக்க அறிஞர் ராபர்ட் டி வார்பீல்ட், ஜான் டி வார்பீல்ட், எலய டி வார்பீல்ட் முதலியோர்.

வார்பீல்ட் வழிவழி வந்தவருள் ஒருவர் திரு. ரிச்சர்ட் வார்பீல்ட் என்பவர். அவரே அமெரிக்காவில் முதல் முதல் 1662-ம் ஆண்டில் குடிபுகுந்தவர். அவருக்கு இரண்டாம் சார்லஸ் மன்னரால் மேரிலாண்டில் பால்டிமூரில் வளப்பமுள்ள ஒரு நிலப்பகுதி கொடுக்கப்பட்டது. அந்த ரிச்சர்ட் வார்பீல்டின் நேரிய வழியில் வந்தவர் திருமதி வாலிஸின் பாட்டனாகிய திரு. ஹென்றி மாக்டியர் வார்பீல்ட் என்பவர். அவர் அமெரிக்க உரிமைப் போராட்டத்தில் கலந்தவருள் ஒருவர். அவரால் பால்டிமூர் ஒளிபெற்றது என்றுங் கூறலாம்.

திரு. ஹென்றி வார்பீல்டின் புதல்வர் திரு. டிக்கல் வாலிஸ் வார்பீல்ட். திரு. வாலிஸ் வார்பீல்ட் தந்தையாரைப் போலவே உரிமைவேட்கை யுடையவர்; கல்வியில் தந்தையினுஞ் சிறந்து விளங்கியவர். அவர்

சட்ட நிபுணர்; நூலாசிரியர். ஸ்பெயினைப்பற்றிப் பல நூல்கள் அவரால் எழுதப்பட்டன.

திரு. வாலிஸ் வார்பீல்ட், திருமதி அலிஸ்மாண்டேகு என்பவரை மணந்தனர். இருவருக்கும் பிறந்தவர் திருமதி வாலிஸ். திருமதி வாலிஸ் தமது மூன்றாம் வயதில் அன்பிற்சிறந்த தந்தையாரை இழத்தல் நேர்ந்தது. அவருடைய அன்னையார் சில ஆண்டு கடந்து வேறு ஒருவரை மணந்து கொண்டார். அக்கணவர் ஈராண்டில் விண்ணுல கெய்தினர். திருமதி வாலிஸின் தாயார் அவ்வளவில் நின்றாரில்லை. அவர் சிந்தை மீண்டும் மற்றும் ஒருவரிடம் நடந்தது. முறைப்படி மணவினை முடிந்தது. மூன்றாங்கணவருடன் அம்மையார் நீண்டகாலம் வாழ்ந்தாரில்லை. அவர் இவ்வுலக வாழ்வை நீத்தனர். அன்னையார் பிரிவு திருமதி வாலிஸுக்குச் சொல்லொணாத்துயரம் விளைத்தது.

அருமை அன்னையார் தமது ஆருயிர் மகள் திருமதி வாலிஸின் முதன் மணத்தைக் காணும் பேறு பெற்றார்; இரண்டாம் மணத்தையுங் கண்டு மகிழ்வெய்தினார்; உலகத்தையே கவர்ந்த ஒருபெரும் திருமணத்தைக் கண்டின்புற அவருக்கு ஆண்டவன் அருள் பாலிக்கவில்லை. என் செய்வது!

மூன்றாண்டில் தந்தையாரை இழந்த இளங்குழந்தை திருமதி வாலிஸ் பெரிதும் அவர்தம் சிறிய தந்தையாராகிய திரு. சாலமன் டேவிஸ் வார்பீல்ட் பார்வையிலேயே வளர்ந்து வந்தார். திரு. டேவிஸ் வார்பீல்ட் செல்வர்; ஒப்புரவாளர். அவர் மரணத்தறுவாயில் தமது சொத்துக்கள் அறச்சாலைகட்குப் பயன்படு முறையில் சாசனம்

எழுதினார். அவ்வேலையில் அன்பர் டேவிஸ் இளைய வாலிஸை மறந்தாரில்லை; திருமதி வாலிஸுக்குப் பதினையாயிரம் டாலர் உதவினார். அப்பொருள் திருமதி வாலிஸின் இளமை வாழ்வுக்கு ஒரோ வழியில் பயன் பட்டது.

வார்பீல்ட் குடியில் தோன்றிய பலர் அரசியல், சட்டம், இராணுவம், வாணிபம், மருத்துவம் முதலிய துறைகளில் பேர் பெற்று விளங்கியவர். அவர்தம் பெயர்கள் அமெரிக்கச் சரித்திரத்தில் இடம் பெற்றுள்ளன. கவர்னர் எட்வின் வார்பீல்ட் திருமதி வாலிஸின் உறவினர் என்பதும், கவர்னர் ஆண்ட்ரு ஜாக்ஸன் மாண்டேகு திருமதி வாலிஸின் அன்னையாரது உறவினர் என்பதும் ஈண்டுக் குறிக்கத்தக்கன.

## பள்ளி வாழ்வு

திருமதி வாலிஸ் பள்ளிக்கூடத்தில் பயின்று வந்தபோது ஒழுங்கு முறையில் தவறுவதில்லை; வேலை நேரத்தில் தவறுவதில்லை. ஆசிரியர் வழி நிற்பதில் அவர் ஆர்வம் உடையவராகவே யிருந்தார். அவருக்கு விளையாட்டில் வேட்கை அதிகம். பள்ளியில் சில நிபந்தனைகள் உண்டு. அவைகளுள் ஒன்று பள்ளிச் சிறுமிகள் பள்ளிச்சிறுவர்கட்குக் கடிதம் எழுதல்கூடாதென்பது. அந்நிபந்தனையை மீறுவோர் மன்னிப்புக் கேட்டு மனந்திரும்புமாறு பள்ளித்தலைவியால் வலியுறுத்தப்படுவர். ஒரு முறை திருமதி வாலிஸ் மன்னிப்புச் சொல்லுதல் நேர்ந்தது. அதன்கண் நகைச்சுவை பொருந்தியிருந்ததாம். இளமையிலேயே திருமதி

வாலிஸ் நகைச்சுவைக்கு ஓர் இலக்கியமாக விளங்கினர். பெண் மக்களின் நகைச்சுவையில் ஒருவகைக் காந்தம் உண்டு.

பள்ளியில் திருமதி வாலிஸ் படித்த கதைகள் பல. அவைகளுள் ஒன்று ஈண்டைக்கு ஏற்புடைத்தென்று தோன்றுகிறது. அக்கதையைப் பால்டிமூர் பள்ளிப் பிள்ளைகள் பலரும் படிப்பது வழக்கம்.
அதன் சுருக்கம் வருமாறு:—

அமெரிக்காவுக்கு முதல் முதல் அனுப்பப் பெற்ற பிரெஞ்ச் ஒற்றர் காப்டன் ஜீரோம் போனபார்டி என்பவர். அவர் நெப்போலியன் போனபார்ட்டியின் தம்பியார். காப்டன் 1803-ம் ஆண்டு அமெரிக்கா சேர்ந்து பால்டிமூரில் தங்கிவந்தார். அவ்வேளையில் காப்டன் போன பார்ட்டிக்கும், அவ்வூரிலிருந்த திருமதி பெட்ஸி பாட்டர்ஸன் என்பவருக்கும் நேசம் உண்டாயிற்று. நேசம் காதலாக முதிர்ந்தது. இருவரும் மணஞ்செய்துகொள்ள முயன்றனர். மணத்தை எவ்வழியிலாதல் தகையத் திருமதி பெட்ஸி பாட்டர்ஸனின் தந்தையார் முனைந்து நின்றார். அவர் தம்புதல்வியாரை வெளியூருக்கு அனுப்பிப் பார்த்தார். உடற்பிரிவால் உள்ளப் பிரிவு நேரவில்லை. திருமதி பெட்ஸி தமது உறுதியினின்றுஞ் சிறிதும் பிறழவில்லை. தந்தையார் முயற்சிகளெல்லாம் பாழ்பட்டன. அவர், புதல்வியாரின் உறுதி கண்டு, தடை கிளத்தலை நிறுத்திவிட்டார். திருமதி பெட்ஸி, தந்தையார் அனுமதி பெற்று, காப்டன் போனபார்ட்டியை மணஞ்செய்தனர்.

அத்திருமணச் செய்தி நெப்போலியன் போனபார்ட்டிக்கு எட்டிற்று. அவர் உள்ளங்கனன்றது; முகஞ்சிவந்தது. தம்பியார் உடனே பிரான்ஸுக்குத் திரும்பிவருதல் வேண்டுமென்று நெப்போலியன் கட்டளை பிறப்பித்தார். நெப்போ

லியன் கட்டளைப்படி காப்டன் போனபார்ட்டி அமெரிக்காவி னின்றும் புறப்பட்டார். அப்பொழுது அவரது அருமை மனைவியார் கருவுற்றிருந்தார். அந்நிலையிலும் அவர் கணவரைத் தொடர்ந்தே போனார். இருவரும் லிஸ்பன் அடைந்தனர். அங்கே அம்மையார் தடுக்கப்பட்டார். காப்டன் மட்டும் பாரிஸ் சேர்ந்தார். அவர் தமது மனைவியாரைத் தம்முடன் வாழ்தற்கு உளங்கொள்ளுமாறு தமயனாரை வேண்டினார். பயன் விளையவில்லை. காரிகையார் தமது ஆருயிர்க்கணவரை மீண்டுங் கண்டாரில்லை. கணவர் பாரிஸில் அழுந்திவிட்டார். திக்கில்லாப் பெண்மணி இங்கிலாந்து போந்தார்; லண்டனுக் கணித்தா யுள்ள காம்பர்வெல்லில் தங்கினார். அச்சமயத்தில் அவர் கருவுயிர்த்தார். பிறந்த ஆண் குழவிக்கு ஜெரோம் நெப்போலியன் போனபார்ட்டி என்னும் பெயர் சூட்டப்பட்டது.

திருமதி பெட்ஸியையும் ஜெரோமையும் பிணித்துள்ள அன்புக்கயிற்றை அறுக்குமாறு நெப்போலியன், போப்பைக் கேட்டார். அப் பாவச் செயலுக்குப் போப் உடன்படவில்லை. பின்னை நெப்போலியன் நீதிமன்றவாயிலாக மணக்கட்டை அவிழ்த்துவிட்டார். அன்பற்ற ஜெரோம் தமது தமயனார் ஆணைப்படி அவர்தம் மனத்துக்கிசைந்த ஒரு பெண்ணை மணஞ் செய்து கொண்டார். திருமதி பெட்ஸி மனமுடைந்து பால்டிமூருக்குத் திரும்பிச் சென்றிருந்து விண்ணடைந்தார்.

இக்கதையைப் பால்டிமூர் பிள்ளைகள் பலரும் படிப்பதன் நோக்கம் என்ன? வாசகர்கள் சிந்திப்பார்களாக. திருமதி வாலிஸும் இக்கதையைப் படித்தனர். இக்கதை அவர்தம் பிற்கால வாழ்வுக்குத் துணை புரிந்ததா? இல்லையா?

## சேவை

1914-ம் ஆண்டில் ஐரோப்பாப் போர் வீறிட் டெழுந்தது. அதில் வேல்ஸ் இளங்கோ தலையிட்டது ஈண்டுப் பொறிக்கத்தக்கது. இளம்பெண்ணா யிருந்த திருமதி வாலிஸூம் அப்போரில் ஒப்புரவு முறையில் தலைப்படல் நேர்ந்தது. போரில் படுகாயமுண்டு துன் புறுவோர்க்குப் பலதிற உதவிகள் செய்யப்படவேண்டு மென்று உலகின் நாலுபக்கங்களிலும் முயற்சிகள் செய் யப்பட்டன. பால்டிமூர் இளம்பெண்களில் முப்பத்து நான்கு பேர் அம்முயற்சிக்குத் துணை புரிய விரும்பினர். அவருள் திருமதி வாலிஸூம் ஒருவர்.

பால்டிமூரில் 'இளைஞர் கழகம்' என்று ஒன்றுண்டு. அதில் பல இளம் பெண்கள் நடம்புரிவார்கள். திருமதி வாலிஸூம் நடம்புரிவர். திருமதி வாலிஸின் நடத்தில் பலர் திளைத்துவிடுவர். இளைஞர் கழகத்தில் நடைபெற்ற நடனங்களால் பெரும்பொருள் கிடைத்தது. அப் பொருள், போரில் காயமுண்டுகிடந்தோர்க்கு அனுப்பப் பட்டது.

திருமதி வாலிஸ் இளமையிலேயே நடனக்கலையில் வல்லவராயினர். அவரது புகழ் நாலுபக்கங்களிலும் பரவலாயிற்று. 'வாலிஸ் நடனம்' எனில் பெருங்கூட்டங் கூடுவது வழக்கம். ஒருபோது அவரது அழகுத் திரு நடனம் ஒரு குதிரைப் படை வீரரின் மனத்தைக் கவர்ந் தது. அவ்வீரர் திருமதி வாலிஸை மணம் புரிய வேட்கை கொண்டார். அம்மையாரது அக்கால வயது மணவினைக்கு இடந்தாராமற் போயிற்று. குதிரைப்

படை வீரரும் வேற்றூருக்கு மாற்றப்பட்டார். (இஃதொரு பத்திரிகையில் கண்ட குறிப்பு. எனக்குக் கிடைத்த நூல்களில் இக்குறிப்பைக் காணேம்.)

## மணமும் விலக்கும்

திருமதி வாலிஸ் பத்தொன்பதாம் ஆண்டெய்தினர். பத்தொன்பதாண்டுப்பாவை பாவலர்க்கு இனிமையூட்டுதல் இயல்பே. திருமதி வாலிஸின் இளமை திரண்டெழுந்து ஐந்தடி நான்கு அங்குல உயரத்தில் காட்சியளித்தது. அக்காட்சியில் அமிழ்தம் பொழிந்தது; ஆனந்தம் நடம் புரிந்தது. அவ்வமிழ்தமுண்டு ஆனந்தத்தில் திளைக்கும்பேறு ஒருவருக்குக் கிடைத்தது.

பிளோரிடாவில் பென்ஸகோலா என்றொரு பதியுண்டு. அங்குத் திருமதி வாலிஸுக்கு உறவினர் உளர். அவரைக்காண அம்மையார் பென்ஸகோலா சென்றார். வாலிஸ் போகுமிடமெல்லாம் நடனவிழா நடக்குமன்றே! அங்கும் அவ்விழா நடந்தது. அவ்விழாவில் கலந்து கொண்டவர் பலர். அவருள் லெப்டினன்ட் எரல் வான்பீல்ட் ஸ்பென்ஸர் என்பவரும் ஒருவர். அவர் விமானப்படை போதகாசிரியர். அவரது நாட்டம், திருமதி வாலிஸ் வார்பீல்ட் மீது விழுந்தது; பாய்ந்தது; படிந்தது. இவர் நாட்டமும் அவர் நாட்டத்தில் ஒன்றியது. பின்னர் இருவரும் பன்முறை கண்டு கண்டு பேசிப் பேசிக் காதலராயினர். அக்காதலுடன் திருமதி வாலிஸ் பால்டிமூர் திரும்பினர். காதல் வாளா கிடக்குமோ? அது கடிதம் எழுதத்தூண்டிற்று. இருவர்க்கும் கடிதப் போக்கு வரவு நடந்தது. திருமணம் உறுதி செய்யப்

பட்டது. திருமணம் பால்டிமூரில் 1916-ம் ஆண்டில் சிறப்பாக நடைபெற்றது. திருமதி வாலிஸ் வார் பீல்ட் அம்மையார் திருமதி வின்பீல்ட் ஸ்பென்ஸர் அம்மையாரானார்.

பென்ஸகோலாவில் இருவரும் இன்பம் நுகர்ந்து வந்தனர். திரு. ஸ்பென்ஸர் உள்ளத்தில்மட்டும் அமைதி நிலவுவதில்லை. அந்நாளில் ஐரோப்பாவில் பெரும்போர் முழங்கிக் கொண்டிருந்தது. அதில் அமெரிக்காவும் கலந்துகொண்டது. திரு. ஸ்பென்ஸர் விமானப்படையொன்றன் தலைவராக்கப்பட்டார். 'எங்கே மாற்றப்படுவோமோ' என்ற எண்ணம் திரு. ஸ்பென்ஸரைப் பிடித்து அலைத்து வந்தது.

லெப்டினன்ட் ஸ்பென்ஸர் கலிபோர்னியாவுக்கு மாற்றப்பட்டார்; பின்னை வாஷிங்டனுக்கு மாற்றப் பட்டார். வாஷிங்டன், திருமதி வாலிஸ் ஸ்பென்ஸர் அம்மையாருக்குப் பல வழியிலும் மகிழ்ச்சி யூட்டிற்று. அடிக்கடி தேநீர் விருந்தும், நடனக் கூட்டமும் அங்கே நடைபெறும்.

தலைவர் அடிக்கடி பலவிடங்களுக்கு விமானத்தில் செல்லல் நேரும். அச்செலவு அம்மையாருக்குப் பிடிப்பதில்லை. இளமை இன்பத்துக் குரியதன்றோ? அது பிரிவை விரும்புமா ?

அந்நிலையில் திரு. ஸ்பென்ஸர் திடீரென்று சினத்திலுள்ள ஷாங்கேய்க்கு மாற்றப்பட்டார். அவர் தமது அருமை மனைவியாரை உடன் அழைத்துச் சென்றிலர். கணவர் மாற்றம் அம்மையார்க்கு அடக்க லொண்ணுத் துயர் விளைத்தது. தனிமை அவருக்குப் பெரும்

பொறையாயிருந்தது. அம்மையார் ஐரோப்பா சென்று சுற்றியும் வந்தார். சில ஆண்டுகடந்த பின்னர், திருமதி ஸ்பென்ஸர் அம்மையார் ஷாங்கே சென்றார்; அங்கே சிலநாள் வதிந்து அமெரிக்கா திரும்பினர். தனிமை விரும்பாத அம்மையார் திரு. ஸ்பென்ஸர் சம்மதம் பெற்றே 1927-ம் ஆண்டில் மணவிலக்குச் செய்து கொண்டார்.

பின்னே திருமதி ஸ்பென்ஸர் அம்மையார், 1928-ம் ஆண்டில் கானடா வாசியாகிய காப்டன் எர்னஸ்ட் ஆல்டிரிச் ஸிம்ஸனை மணம்புரிந்து திருமதி ஸிம்ஸன் அம்மையாரானர். இருவரும் லண்டனில் வாழ்ந்து வந்தனர். இடையில் காப்டன் ஸிம்ஸன் அயலகம்போந்து துயில்நீத்து வருவாராயினர். அது திருமதி ஸிம்ஸன் மனத்தைப் புண்படுத்திற்று. அது காரணமாக அம்மையார் திரு. ஸிம்ஸன்மீது வழக்குத் தொடுத்தார். அம்மையார் விரும்பியவாறே 1936-அக்டோபர் - 27-ம் நாளில் மணவிலக்கு நல்கப்பட்டது. தீர்ப்பு நாள் தொட்டு ஆறு திங்கள்வரை அம்மையார் எவரையும் மணஞ் செய்யாதிருத்தல் வேண்டும். அது நாட்டு விதி. அதனல் அவர் அக்கால எல்லேவரை திருமதி ஸிம்ஸன் என்னும் பெயரையே தாங்கியிருந்தார்.

திருமதி ஸிம்ஸன் இரண்டுமுறை மணவிலக்குச் செய்துகொள்ளும் அவசியம் நேர்ந்தது. முதன்முறைக்குரிய காரணத்தையும் நோக்குங்கள்; இரண்டாமுறைக்குரிய காரணத்தையும் நோக்குங்கள். அம்மையாரிடம் எவ்விதத் தவறுதலும் நிகழவில்லை என்பதும், அவர் மீது குற்றங்கண்டு நாயகன்மாரே வலிந்து அவரைத் தள்ள முயலவில்லை என்பதும் நன்கு தெரிகின்றன.

முதன்முறை மணவிலக்கைப் பற்றிச் சிலர் ஒரு விதக் கருத்துக்கொள்ளலாம். அஃது, அம்மையார் தனிமை வாழ்வை இன்னுஞ் சில ஆண்டு பொறுமையுடன் நடாத்தியிருக்கலாம் என்பது. அஃது அவரவர் மனோநிலையைப் பொறுத்து நிற்பது. திருமதி ஸிம்ஸன் பாரதமாதாவின் வயிற்றிற் பிறக்கும் பேறுபெற்றவரல்லர். அவர் அப்பேறு பெற்றிருந்தால், பொறுமை என்னும் இயற்கைப் பூண் அவருடன் பிறந்திருக்கும். அவர் பிறந்த நாடு, அவரைச் சூழ்ந்துள்ள நாகரிகம், வழக்க வொழுக்கம் முதலியன திருமதி ஸிம்ஸனுக்குப் பொறுமைப் பூணை அணியவில்லை. அவைகளிடை அப்பூண் அமைதலும் அரிது.

இரண்டாம்முறை விலக்கைப்பற்றி நாயகனைத் திருத்த அம்மையார் ஏன் முயன்றிருத்தல் கூடாது என்னுங் கேள்வி எழுதற்கு இடமுண்டு. திருமதி ஸிம்ஸன் திருநீலகண்ட நாயனார் புராணம் படித்தவரல்லர். என் செய்வது? மணவிலக்கு நாவல்களையே அவர் பெரிதும் படித்திருப்பர்.

மண விலக்குச் சட்டமொன்று எதிரிலே நின்று கொண்டிருக்கிறது. "உன்போன்றார் துயர் போக்க வன்றோ யானிருக்கிறேன்? ஏன் துக்கக் கவல்கின்றனை? என்னை ஆள்வாயாக" என்று அச்சட்டம் அம்மையாரைத் தூண்டாதிருக்குமோ? சட்டமுள்ள இடத்தில் சட்டத்துக்கு இரையாதல் மக்களியல்பன்றோ? சட்டமில்லாதிருப்பின் அம்மையார் வாழ்வு எவ்விதம் முடிந்திருக்குமோ? இப்பொழுது அதைப்பற்றி ஒன்றுஞ் சொல்வதற்கில்லை.

இந்தியாவில் இந்து சமூகத்தில் இப்பொழுது மண விலக்குச் சட்டமில்லை. இந்தியாவில் பண்டை அறம் வீழ்ந்துபட்டுள்ள இந்நாளிலும் கணவரையே உயிரெனக் கருதி வாழும் பெண்மணிக ளிருக்கிறார்கள். அக்கொள்கை அரும்பி நிற்பதற்குரிய வழக்க வொழுக்கங்கள் நாட்டில் தொன்று தொட்டு நிலவி வருகின்றன. எவரெவர் எவ்வெவ்வழக்க வொழுக்கங்களிற் படிகிறாரோ அவரவர் அவ்வவ் வழக்க வொழுக்கங்களின் வண்ணமாதல் இயல்பு.

## குணநலன்

திருமதி ஸிம்ஸன் நல்லுடையில் விருப்பமுடையவர். நீலத்தில் அவருக்கு விருப்பம் அதிகம். திருமதி ஸிம்ஸன் நகைப்பித்தரல்லர். காதணியை அவர் வெறுத்த நாளுண்டு. பின்னாளில் அவ்வணியில் அவர் தஞ் சிந்தை நடந்தது.

அமைதியும் இரக்கமும் திருமதி ஸிம்ஸனுடன் பிறந்த இயல்புகள். பிறர்நிலையை மிகவிரைவில் உணர்ந்து கொள்ளும் பேராற்றல் அம்மையாரிடம் அமைந்துள்ளது. ஆனால் பிறரைப் பற்றித் தாங்கொள்ளுங் கருத்தை அவர் பெரிதும் வெளியிடுவதில்லை. தமக்குத் தெரிந்தவருள் எவரேனும் தவறாக நடந்து, அந்நடக்கையால் அவருக்குப் பெருந்தீங்குவிளையுமென்று தமக்கு உறுதியாய்த் தோன்றும்போது, அவர் மனம் புண்படாதமுறையில், ஏதோ ஒன்றைப் பேசுவதுபோலவும், யோசனைகள் செய்வது போலவும் புத்திமதி கூறுவது அம்மையார் வழக்கம்.

இலக்கியம், ஓவியம், நாடகம் முதலிய கலைகளில் திருமதி ஸிம்ஸனது மனம் படிவதுண்டு. நடனம் அவரது உரிமைக் கலை. அம்மையாரின் நெஞ்சம் அச்சம் அறியாது. அஃது அவர்தம் முன்னோர்பால் சிறந்து விளங்கிய இயல்.

திருமதி ஸிம்ஸனது கட்புலன் ஒருவிதத் தனியமைப்பு வாய்ந்தது. பல வகைப்பொருள்கள் மலியும் ஒரு காட்சியில் அம்மையாரின் கட்புலன் நுழைந்து சுழலுமாயின், ஆண்டுள்ளனவெல்லாம் அவர்தம் அகத்தில் அச்சாகிவிடும். ஈண்டொரு நிகழ்ச்சி வருமாறு:

ஒருமுறை திருமதி ஸிம்ஸன் சில நண்பருடன் ஒரு பழங் கோயிலுக்குச் சென்றனர். அக்கோயிலில் எத்தனையோ பழம்பொருள்கள் காட்சியளித்தன. அவைகளை எல்லாரும் பார்த்து வெளியே வந்தனர். வந்ததும் திருமதி ஸிம்ஸன், நண்பர்களைப் பார்த்து, 'அந்தப் பழங் கடிகாரம் எப்படி யிருக்கிறது? பார்த்தீர்களா?' என்றார். நண்பர்களெல்லாரும் ஒருவரை ஒருவர் பார்க்கிறார்; விழிக்கிறார்; 'கடிகாரம் எங்கேயிருக்கிறது? வாலிஸ் தவறாகக் கூறுகிறாள்' என்று நகைத்தனர். திருமதி ஸிம்ஸன் அவர்களை நோக்கி, "திரும்புங்கள் கோயிலுக்கு" என்று நண்பர்களை அழைத்துப் போனார்; கோயிலில் ஒரு மூலையில் பழமைக் காட்சி வழங்குங் கடிகாரத்தைக் காட்டினார். எல்லாரும் அம்மையாரது கட்புலனின் திறத்தை வியந்தனர். கட்புலனில் திறமுடையார் கூர்த்த மதியினர் என்பது மனோதத்துவர் கண்ட உண்மைகளுள் ஒன்று.

விருந்தோம்புவது திருமதி ஸிம்ஸனிடத்தில் சிறந்து விளங்கும் நல்லியல்பு. விருந்தினரிடம் தனித் தனியே பேசிப் பேசி அமுதூட்டுவதில் அம்மையாருக்கு வேட்கைஅதிகம். அதனால்அவர் மிகச்சிலரையே விருந்தினராக அழைப்பது வழக்கம். விருந்து காரணமாக நண்பர் தொகை பெருகுவதுண்டு.

திருமதி ஸிம்ஸன் நல்லவரென்றே பலராலும் போற்றப்படுகிறார். இதற்குப் பல சான்றுகளிருக்கின்றன. அச்சான்றுகளில் எவருடையதைச் சிறப்பாகக் கொள்ளலாம்? நெருங்கிய உறவு கொண்டவருடையதைக் கொள்வதே சிறப்பு. பெண்மணிகளுக்கு நெருங்கிய உறவினர் யாவர்? அவரவர் கொழுநன்மாரே யாவர்.

எட்டாம் எட்வர்ட் மன்னருக்கும், திருமதி ஸிம்ஸனுக்கும் நேர்ந்த காதற் செய்தி யாண்டுங் காட்டுத் தீப்போல் பரவிற்று. அச்செய்தி சுழலாத இடமேயில்லை. அச்சுழற்சி திருமதி ஸிம்ஸனது முதற் கணவர் லெப்டினன்ட் ஸ்பென்ஸர் கருத்தை ஈர்த்தது. அவ்வேளையில் அவர், திருமதி ஸிம்ஸனைப்பற்றித் தங்கருத்தை வெளியிட்டார். அக்கருத்தின் சாரம் வருமாறு :—

> 1920-ம் ஆண்டு எப்ரல் மாதம் ஏழாம் நாள் கார்னேடோ விடுதியில் ஒரு நாட்டியம் நடைபெற்றது. அதற்குத் திருமதி வாலிஸ¬ம் (இப்பொழுது திருமதி ஸிம்ஸன்) யானும் போயிருந்தோம். அங்கே எட்வர்ட் மன்னர் (அப்பொழுது இளங்கோ) வீற்றிருந்தார். நாங்களிருவரும் அவரைக் கண்டோம்; ஆனால் அவருடன் பேசும் பேறு பெற்றோமில்லை.
>
> திருமதி வாலிஸ் அழகு வாய்ந்தவர்; நகைச்சுவையுடையவர்; மகிழ்ச்சியை விளைவிப்பதில் வல்லவர். அவர் எங்கிருப்பினும் யான் எங்கிருப்பினும் அவர் நலனை யான்

நாடிக் கொண்டிருப்பன். அவரை எட்வர்ட் மணந்தால் அவர் திருவுடையவராவர்.

திருமதி வாலிஸுக்கும் எனக்கும் வெறுப்புக்காரணமாகப் பிரிவு நேரவில்லை. யான் சீனத்துக்கு மாற்றப்பட்டேன். அங்கேயே தங்கும் நிலைமை ஏற்பட்டது. அது காரணமாகச் சமாதான முறையில் நாங்கள் மணவிலக்குச்செய்து கொண்டோம்.

இது, முதற்கணவர் நன்மொழி. திரு. ஸிம்ஸனிடத்தில் ஏதாயினும் தீக்குணமிருப்பின், அதைத் தூற்றுவதற்கு வாய்ப்புக் கிடைத்தபோது முதற்கணவர் தூற்றலாமன்றோ? திருமதி ஸிம்ஸனிடத்தில் தீக்குணமில்லை. அதனால் முதற்கணவரிடமிருந்து எவ்விதத் தூற்றுமொழியும் பிறக்கவில்லை; போற்றுமொழியே பிறந்தது.

"முதற்கணவர் நீண்ட காலம் வெளியூரில் வதிந்தவர்; திருமதி ஸிம்ஸனுடன் சிலகாலமே நெருங்கி வாழ்ந்தவர்; இளமை இன்பம் நுகர்ந்தவர்; அச்சிலநாளில் - அதினும் இளமையில் - ஒருவரது நலந்தீங்கை அளந்துணரல் அருமை" என்று சிலர் கருதலாம். நீண்டநாள் வாழ்வில் நெருங்கி ஈடுபட்டிருந்த இரண்டாங்கணவராகிய காப்டன் ஸிம்ஸனாதல் திருமதி ஸிம்ஸனைப்பற்றிக் குறைவாக ஒருரையாவது இதுகாறுங் கூறியதாகத் தெரியவில்லை. திருமதி ஸிம்ஸனிடம் ஏதாயினுங் குறைபாடிருந்தால் அதைக் காப்டன் ஸிம்ஸன் நீதிமன்றத்தில் கூறியிருப்பர்; அல்லது பத்திரிகை வாயிலாகவோ வேறு வாயிலாகவோ வெளியிட்டிருப்பர்.

பல பத்திரிகைகளில் பலர் திருமதி ஸிம்ஸனைப்பற்றிப்பலவாறு எழுதினர். ஒருவரேனும் 'ஸிம்ஸன் தீக்

குணமுடையார்' என்று கூறினாரில்லை. அவர்தம் உரைகளால் திருமதி ஸிம்ஸன் நல்வழியில் வாழ்வு நடாத்துவோர் என்பதே விளங்குகிறது.

## பழிகள்

திருமதி ஸிம்ஸன் மீது சுமத்தப்படும் பழிகள் சில. அவைகளை ஆராய்ந்து முடிவு காண வேண்டுவது அறிஞர் கடமை. முதலாவது சாட்டப்படும் பழி அம்மையார் இருவரை மணந்து விலகியவர் என்பது. இப்பழியை மேல்நாட்டிற் பிறந்தவர், மேல்நாட்டிற் பிறந்த ஒருவர்மீது சுமத்துவதற்கு இடம் ஏது? அந் நாட்டுச் சட்ட திட்டங்கள் அப்பழிக்கு இடந் தருவனவா யிருக்கின்றனவா? இல்லையே! அங்கே சட்டப்படி மண விலக்கும் மறுமணமும் செய்துகொள்ளும் உரிமை யுண்டு. இந்தியாவில் - சிறப்பாக ஹிந்து சமூகத்தில்- மணவிலக்குச் செய்வதில்லை. அதற்கெனத் தற்போது சட்டமொன்றுமில்லை. அச்சமூகத்தார் மண விலக்கில் ஈடுபட்டு மறுமணஞ் செய்துகொண்டால் சமூக முறைப் படி பழிசுமத்தற்கு இடமிருக்கும்.

திருமதி ஸிம்ஸன் மேல் நாட்டிற் பிறந்து, அந் நாட்டு வழக்க வொழுக்கங்கட் கியைந்த சட்டங்களின் படி வாழ்ந்து வருவோர். அவர்மீது மணவிலக்குப் பழியோ மறுமணப்பழியோ சுமத்துவது நியாயமாகாது.

வாழ்வு என்பது என்ன? நாட்டு வழக்க வொழுக் கங்களின் படியும், சட்ட திட்டங்களின் படியும் பரி ணமிக்கும் ஒன்றே வாழ்வு என்பது. எவரெவர் எவ்வெவ் வழக்கவொழுக்கங்களில் ஈடுபடுகிறாரோ அவரவர் அவ்

வவ் வழக்கவொழுக்கங்களின் வண்ணமாதல் இயற்கை. சார்ந்ததன் வண்ணமாவது உயிரின் தன்மை.

மனிதர் எவர்? மனிதர் என்பவர் வெறுந் தோலல்லர்; எலும்பல்லர்; நாடி நரம்பல்லர்; பிறவுறுப்புக்களுமல்லர்; இவையெல்லாஞ் சேர்ந்த கூடுமல்லர். பின்னை என்னை? எண்ணம் - எண்ணத்தின் ஈட்டம் - மனிதர்.

எண்ணம் எது? காண்டல், கேட்டல், பயிறல், உண்ணல், உணரல், உறுதல் முதலியவாற்றுன் முகிழ்ப்பது எண்ணம். எண்ணமே மனிதராகிறது. எண்ணமே வாழ்வு, வீடு, ஊர், நாடு, உலகம், எல்லாம். சூழ்ந்துள்ள வழக்கவொழுக்கங்களும் பிறவும் எண்ணத்தின் பரிணமங்களேயாகும். வழக்க வொழுக்கங்கள் உயிர்களைத் தங்கள் வயப்படுத்தித் தங்கள் மயமாக்கும். அஃது இயற்கைத் தத்துவம்.

வின்ஸர் கோமகளார் மேல்நாட்டு நாகரிகமென்னும் தடத்தில் பூத்த ஓரழகிய மலர். அம்மலரில் எம் மணங் கமழும்? அவர்தம் நாட்டு வழக்கவொழுக்க மணமே கமழும்.

மேல்நாட்டு மணவிலக்கும் மறுமணமும், அந்நாட்டு வழக்க வொழுக்கங்களினின்றும் அமைந்தவை. அவ் வழக்க வொழுக்கச் சட்டதிட்டச் சூழலிடைப் பிறந்து வளர்ந்து வாழ்ந்துவரும் ஒருவர் மனம் எம்மயமாகும்? அம்மனக் கண்கொண்டே அவரது நடைமுறையை நோக்குதல் வேண்டும். இந்திய மனம் - ஹிந்து மனம்-கொண்டு அவர்தம் நடைமுறையை நோக்குதல்கூடாது.

மேல்நாட்டில் மணவிலக்கும் மறுமணமும் ஆட்சியிலிருப்பதால், அந்நாட்டு ஒழுக்கத்துக்கும் நம் நாட்டு

ஒழுக்கத்துக்கும் பொருளில் வேறுபாடு உண்டு. நம் நாட்டிலுஞ் சட்டம் பிறந்து, ஆட்சி பழம்பாடமாயின், ஒழுக்கத்தின் பொருள் நாளடைவில் வேறுபட்டுவிடும். இங்கே மேல்நாட்டுச் சட்டமுறைபற்றிய ஒழுக்கத் திறனே பேசப்படுகிறது என்று நேயர்கட்குத் தெரி வித்துக்கொள்கிறேன்.

மணவிலக்குச் சட்டமுள்ள விடங்களில் ஒருத்தி ஒருவனுடனும் ஒருவன் ஒருத்தியுடனும் வாழும் போது, அவர் பிறரிடத்தில் வேட்கை கொள்ளாதிருப் பதே ஒழுக்க வாழ்வு எனப்படும். அதுவும் சட்டதிட் டங்களால் சிதைவுறுதல் உண்டு. இருவர்க்குள் வெறுப்போ பிறவோ தோன்றினால், ஒருவர் வேறு ஒருவரிடம் மண உறுதி செய்துகொண்டு, மணவிலக்குச் செய்துகொள்வதும் மேல்நாட்டு வழக்க வொழுக்கங்களி லொன்று. அந்நாட்டு நாகரிகம், வழக்க வொழுக்கம், சட்டம் முதலியவற்றை உளங்கொண்டு, காய்தல் உவத் தல் அகற்றி, நடுநின்று, நிலைமையை ஆய்ந்தால், திரு மதி ஸிம்ஸன்மீது பழி சுமத்துதற்கு எவ்வழியி லும் இடமில்லை என்று அறுதியிட்டுக் கூறலாம். ஆகவே, திருமதி ஸிம்ஸன்மீது சுமத்தப்பெற்ற முதற் பழிக்கு அவர் உரியவரல்லர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்குகிறதென்க.

திருமதி ஸிம்ஸன் மீது சுமத்தப்படும் இரண்டா வது பழி அவர் நடுத்தரக் குடியிற் பிறந்தவர் என்பது. ஒருவிதத் தருக்கமுறைப்படி 'நடு' என்பது பொரு ளற்ற ஒன்றாகும். 'நடு' என்பது ஓரளவில் உயர்வைச் சாரும்; இன்னோரளவில் தாழ்வைச்சாரும். அது தனிப்

3

பட்டு நிற்பதன்று. உலக வழக்கில் மட்டும் அஃதோ ரிடம் பெற்றிருக்கிறது.

இயற்கைப்படைப்பில் உயர்வு தாழ்வு முதலிய வேற்றுமைகளில்லை. உயர்வு அல்லது தாழ்வு என்னுங் குறியுடன் எவரேனும் பிறக்கின்றனரோ ? வறியர் குழந்தையின் பிறப்புக்கும், செல்வர் குழந்தையின் பிறப்புக்கும் ஏதாயினும் வேற்றுமை யுண்டோ ? எல்லார்க்கும் பிறப்பும் ஒன்றே ; இறப்பும் ஒன்றே. பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் மக்களுக்குள் உயர்வு தாழ்வு முதலிய வேற்றுமைகள் கற்பிக்கப்படு கின்றன. அக்கற்பனையினின்றும் சமூகக்கட்டும், விதி விலக்கும், இன்ன பிறவும் முளைக்கின்றன.

உயர்வு தாழ்வு முதலிய கற்பனையாதல் எல்லா விடங்களிலும் ஒரேவிதமாக இருக்கிறதா? இல்லையே. கற்பனை ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக இருக் கிறது. உயர்வு தாழ்வு முதலியன சில விடங்களில் பிறப்பை யொட்டிக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன ; சில விடங்களில் சிறப்பை யொட்டிக் கற்பிக்கப்பட்டிருக்கின் றன. பிறப்புக்கற்பனை நாளுக்குநாள் மாய்ந்து வருகிறது. மற்றையது மாய்ந்து வருதல் காணோம்.

சிறப்புக்கள் பல திறத்தன. அவைகளுள் இங்கே குறிக்கத்தக்கன இரண்டு. ஒன்று கல்வி யறிவுச்சிறப்பு; மற்றொன்று செல்வச் சிறப்பு. இவ்விரண்டனுள் முன்னை யது இயற்கையின் பாற்பட்டது ; பின்னையது செயற் கையின் பாற்பட்டது. இயற்கை மாயாது ; செயற்கை மாயும்.

ஒருவரிடத்துள்ள கல்வியறிவைக் கவர்தல் எவ ரால் இயலும்? (நோயும், பித்தும், முதுமையும், இன்ன பிறவும் அதை ஒரோவழிக் கவர்தல்கூடும்). செல்வம் எளிதில் கவரப்படலாம். செல்வம் சிறப்புப்பெறாத நிலையையும் உலகம் காண்டல்கூடும். செல்வர் வறியர் என்னும் வேற்றுமைக்கே இடமில்லாமல், எல்லாரையும் ஒரேவிதப் பொருளுடையராக்கும் ஆட்சி முறையில் செல்வம் சிறப்புறுதற்கு இடம் ஏது? எத்திற ஆட்சி முறையினும் கல்வியறிவுக்குச் சிறப்பிருந்தே தீரும்.

மேல்நாட்டிற் பெரிதும் பிறப்பு வழியிற் சிறப்புக் கருதுஞ் சிறுமையில்லை. அங்கே செல்வத்தின் வழிச் சிறப்புக்கருதுஞ் சிறுமை பல விடங்களில் உண்டு. அவ் விடங்களிலுஞ் செல்வம் குறிப்பிட்டவரிடத்திலேயே என்றும் நிலைத்திராது. அஃது ஒருவரிடத்திலிருந்து மற்றொருவரிடத்துக்குச் சென்று கொண்டேயிருக்கும். இன்று செல்வராயுள்ள ஒருவர் நாளை வறியராயினு மாவர்; அவ்வாறே இன்று வறியராயுள்ள ஒருவர் நாளை செல்வராயினுமாவர். நிலையில்லாத செல்வத்தைப் பொருளாக் கொண்டு மக்களுக்குள் தரங்கள் வகுப்பதும் கருதுவதும் அறியாமை.

திருமதி ஸிம்ஸனைப் பார்க்கிலும் செல்வத்திலுஞ் சீரிலும் இழிந்தவர்களை ஆங்கில மன்னர்கள் மணஞ்செய் துள்ளார்கள். சரித்திர உலகஞ் சாகாமலே இருக்கிறது. அவ்வுலகை நோக்குக. அதை விரிக்கின் கட்டுரை நீளும். சமதர்ம ஆட்சியில்லாத இடங்களில் வறியர் செல்வரா தற்கு வாய்ப்புகள் பல உண்டு. திருமதி ஸிம்ஸன் இந் நிலையிலேயே இருப்பர் என்று எப்படி எண்ணுதல்

கூடும்? நிலைமை மாறினும் மாறும். ஆகவே, 'நடுத்தரம்' என்னும் காரணம் கிளத்துவது நியாயமாகாது.

மன்னராட்சியில் மன்னரென்றும் குடிமக்களென்றும் இரு பகுதி யுண்டு. குடிமக்களில் இன்னார் குடிமக்கள், இன்னார் குடிமக்களல்லர் என்னும் வேற்றுமை யுண்டோ? செல்வர் மட்டுமோ குடிமக்கள்? மற்றவர் குடிமக்களல்லரோ? மன்னர்க்கு எல்லா வகையினருங் குடிமக்களேயாவர். எல்லாருள்ளத்திலுந் தங்குவோரே மன்னராவர். அவர் எல்லார்க்கும் உரியர். மன்னர் நெஞ்சில் செல்வர் நடுவர் வறியர் என்னும் வேற்றுமையே இருத்தல் கூடாது. வேற்றுமை மனமுடையார் மன்னராகார். ஆதலால் மன்னரொருவர் மனங் கொண்டால் நடுத்தர வகுப்புப் பெண்ணையும் மணஞ்செய்து கொள்ளலாம். எனவே, திருமதி ஸிம்ஸன் மீது சுமத்தப்பெறும் இரண்டாம் பழிக்கு அறவுலகில் இடமில்லை என்றே கூறலாம்.

மூன்றும் பழி, திருமதி ஸிம்ஸன் அமெரிக்கப் பெண்மணி என்பது. இதைவிட அறியாமை வேறொன்றில்லை. காதலில் சாதி, மதம், நிறம், மொழி, நாடு முதலிய வேற்றுமைகட்கு இடம் ஏது ? காதல் எல்லாவித வேற்றுமைகளையுங் கடந்தது.

அந்தோ ! குறுமதி, இற்றை ஞான்றும் - நாகரிக உலகிலும் - தன்னாட்சி செலுத்துகிறதே ! இது விந்தையா? வியப்பா? ஆணவமா? குறுமதியர் வழி நின்றே ' மூன்றும் பழி 'யை நோக்குவோம். அவர் வழி நின்று நோக்கினும் அப்பழி பொருளற்ற தொன்றென்றே தோன்றும்.

அமெரிக்கா எந்நாடு? அது கீழ் நாடன்று; மேல் நாடு. அமெரிக்காவின் மொழி என்ன? ஆங்கிலம். அமெரிக்கா இனம் பலவித ஐரோப்பிய இரத்தங் கலந்த தொன்று; பெரிதும் ஆங்கில இரத்தம் கலந்தது. திருமதி ஸிம்ஸனுடைய முன்னோர் ஆங்கிலேயரே. அமெரிக்கா ஆங்கில ஆட்சியினின்றும் விடுதலை பெற்ற ஒரு நாடு. பல வழியிலும் அமெரிக்கா ஆங்கில இனத்துடன் பெரிதும் தொடர்புடையது. அஃது எப்படித் தீண்டாமை நாடாகும்? இங்கே இங்கிலாந்து அரசர் வழி வழியைச் சரித்திரக் கண்கொண்டு நேயர்கள் ஆராய்வார்களாக. அஃது ஒரே வழியில் தோன்றி, ஒரே வழியில் வளர்ந்து, ஒரே வழியில் நின்றுகொண்டிருப்பதா? கலப்பு இயற்கை. ஆதலால் ஆராய்ச்சியில் மூன்றும் பழியும் போலியாதல் விளங்கும். இன்னுஞ் சில பழிகள் சொல்லப்படுகின்றன. அச்சிறுமைகள் மீது கருத்துச் செலுத்தி நூலைப் பெருக்க விருப்பமில்லை.

## மலர்

அமெரிக்கா இயற்கை அன்னையின் ஓர் உறுப்பு. அவ்வுறுப்பு அழகியது; வளஞ்செறிந்தது; மலை, காடு, வயல், ஆறு, கடல் முதலிய கலன்களை நன்கு அணிந்தது. கலன்களின் எடுப்பாகவும், அரும்பாகவும், படகேராகவும், பிறவாகவும், பொழில் - கா - தூறு - பைங்கூழ் - பசும்புல் முதலியனவும், சுனை - அருவி - ஓடை- கேணி - தடம் முதலியனவும் முகிழ்த்து நிற்கின்றன. அவைகளினின்றும் மலர்ந்து கண்ணையுங் கருத்தையுங் கவருந் துணர்கள் பலப்பல. அத்துணர்களிலுள்ள ஒரு

மலர் திருமதி ஸிம்ஸன் என்னும் பெண்ணேளி. அவ்வொரு மலர், பால்டிமூர் என்னுஞ் சோலே சூழ்ந்த வார்பீல்ட் என்னுங் குடும்பத் தடத்திடைப் பூத்தது. ஒருசிறு தடத்திடைப் பூத்த மலரின் மணம் எவ்வளவு தூரம் வீசுகிறது! மணம், வார்பீல்டில் மட்டுமோ - பால்டிமூரில் மட்டுமோ - அமெரிக்காவில் மட்டுமோ - மேல் நாட்டில் மட்டுமோ வீசுகிறது! உலக முழுவதும் அந்நறுமணம் வீசுகிறது.

*அமெரிக்காவில் ஒரு சிற்றூரில் தோன்றிய ஒரு பெண்மணி - மூன்று வயதில் தந்தையை யிழந்த ஒரு பூங்கொடி - இப்பொழுது உலகோர் உதட்டில் உலவும் ஒரு நிலே எய்தியுள்ளார் ! திருமதி ஸிம்ஸன் முதலில் ஒரு தளபதியை மணந்தார்; பின்னர் ஒரு வாணிபரை மணந்தார் ; இப்பொழுது உலகிலேயே ஒப்பும் உயர்வும் அற்ற ஒரு பெரும் சாம்ராஜ்யத்தின் மன்னர் மன்னரா யிருந்த ஒருவர்தங் காதலராயினர். திருமதி ஸிம்ஸன் இப்பேறு பெறுதற்குக் காரணமாக நின்றது எது ? ஆராய்ச்சி யுலகுக்கு இஃதொரு பெரிய வேலே. காரணம் எது என்று கூறுவது ?* திருமதியின் கருங் கூந்தலா ? நீலக்கண்ணு ? பவளவாயா ? தொங்குந் தோடா? முத்துப்பல்லா? அமுதமொழியா? புன்நகையா? நகைச் சுவையா? ஒளிர்மேனியா? நடனத்திறமா? ஒப்புரவா? நல்லறிவா ? ஊழா ? எது ? இவைகட்கு நிலேக் களனுயுள்ள ஒன்று ?

*திருமதி ஸிம்ஸனிடத்தில் ஒருவித மின்னலிருக் கிறது. அஃது அவர் பிறவியில் அமைந்தது. அம் மின்ன*

லோட்டத்தினின்றும் பல கூறுகள் கிளர்ந்து காளா மணி விளக்குகளாக ஒளி செய்கின்றன. விளக்குகளின் ஊடே புகுந்து புகுந்து பார்த்தால் மின்னலும், அதன் ஓட்டமும் புலனாகும்.

> "கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்றின்
> ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
> பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
> நல்லாள் பிறக்குங் குடி"—**நான்மணிக்கடிகை.**

# IV வின்ஸர் கோமகனார்

வின்ஸர் கோமகனார் (எட்டாம் எட்வர்ட்) வரலாற்றை ஈண்டு விரித்துக் கூற வேண்டுவதில்லை. வின்ஸர் கோமகனார் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர்க்கும் மேரிராணியார்க்கும் முதற் பிள்ளையாக 1894-ம் ஆண்டு, ஜூன் திங்கள், 23-ம் நாள் பிறந்தவர். முதற்பிள்ளை இளங்கோவாதல் சம்பிரதாயம். பிரிட்டன் இளங்கோ, 'வேல்ஸ் இளவரசர்' என்று அழைக்கப்படுவது வழக்கம். வின்ஸர் கோமகனார் *இருபத்தைந்தாண்டு வேல்ஸ் இளங்கோவாக இருந்தவர்; †ஏறக்குறைய ஓராண்டு மன்னராக விளங்கினவர்; திருமதி ஸிம்ஸன் காரணமாக அரியாசனந் துறந்தவர் என்று சொல்லப்படுவோர்.

வின்ஸர் கோமகனார் இளமையில் கற்பன கற்றார்; கேட்பன கேட்டார். அவருக்கு ஐந்து மொழி தெரியும். வேல்ஸ் இளங்கோவாக வருவோர் பெரிதும் பிரிட்டன் சாம்ராஜ்யத்திலடங்கிய தேசங்களைச்சுற்றிவருவது வழக்கம். அவ்வழக்கப்படி வின்ஸர் கோமகனார் இளங்கோவா யிருந்தபோது பிரிட்டிஷ் சாம்ராஜ்ய நாடுகளையும், மற்ற நாடுகளையுஞ் சுற்றி வந்தார். தரைச்செலவிலும் கடற்செலவிலும் அவர் பெரும்பொழுது போக்கினார். உலகில் அவர் நுழையாத நாடு இல்லை என்றே கூறலாம்.

மன்னராகும் வாய்ப்புடைய ஒருவர், கற்பன கற்றுக் கேட்பன கேட்டுத் தெளிவடைந்த பின்னர்ப் பல

*1911—1936. †325—நாள்.

நாடுகளைச் சுற்றி வருவது நல்லது; ஆங்காங்குள்ள நிலைமைகளை நேரிற் கண்டுணர்வது சிறப்பு. அதனால் பலவித நாட்டின் இயல்புகளையும், பலவித மக்களின் இயல்புகளையும் அளந்துணரும் ஆற்றல் உண்டாகும். கல்வி கேள்விகளால் விளங்கும் அறிவுடன், தரைச்செலவாலும் கடற்செலவாலும் அநுபவ அறிவு நன்கு விளங்கும். அநுபவம் அற்ற அறிவினும், அநுபவம் உற்ற அறிவு வாழ்வுக்கும் உலகுக்கும் நன்முறையில் பயன்படுவதாகும்.

வின்ஸர் கோமகனார் பல வழியிலும் அநுபவ அறிவு பெற்றவர்; எதையும் தாமே ஆராய்ந்து சீர்தூக்கிப் பார்த்து முடிவு காணும் பேராற்றல் வாய்ந்தவர். இத்துறையில் வின்ஸர் கோமகனாரைப் போன்றதொரு மன்னர் மன்னனைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இதுகாறும் பெறவில்லை என்று சரித்திரம் கூறும். உலக அநுபவ ஞானத்தினின்றும் முகிழ்த்தெழுந்த 'ஒரு பெரும் பல்கலைக் கழகம்' என்று வின்ஸர் கோமகனாரைக் கூறுதல் மிகையாகாது.

## மன்னரியல்

போதிய கல்வி யறிவும், அநுபவ ஞானமும் உடைய ஒருவரே மன்னராதற்கு உரியர். மன்னராவார் எவர்? மற்றவராட்டும் பொம்மைபோ லிருப்பவர் மன்னராகார். உயிர்களின் உள்ளமெனும் அரியாசனத்தில் வீற்றிருப்பவரே மன்னராவர்.

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்"

—மோசிகீரனார் (புறநானூறு.)

"நெல்லுயிர் மாந்தர்க் கெல்லாம் நீருயிர் இரண்டுஞ் செப்பில்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை
மல்லலங் களிற்று மாலை வெண்குடை மன்னர் கண்டாய்
நல்லுயிர் ஞாலந் தன்னுள் நாமவேல் நம்பி என்றான்"

—திருத்தக்கதேவர்

"மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன், தன்னுயிர்"

—சாத்தனார்

"மண்ணில் வாழ்தரு மன்னுயிர்க் கெலாம்
கண்ணும் ஆவியு மாம்பெருங் காவலன்"

—சேக்கிழார்

"வைய மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னனுக்கு"—கம்பர்

இம்முது மொழிகளை நோக்குக.

வின்ஸர் கோமகனாரிடத்தில் மன்னர்க்குரிய இயல்புகளெல்லாம் நிரம்பிக் கிடக்கின்றன. அவைகள் பிரிட்டனுக்கும், மற்றச் சார்பு நாடுகளுக்கும் பயன்படாமற் போயின. வேறு வழியில் அவைகள் பயன்படுங் காலம் வரினும் வரும்.

வின்ஸர் கோமகனார் தாளாளர். சோம்பல் அவரை அணுக அஞ்சும். எல்லாவற்றிற்கும் அவர் பெரிதும் வேலையாட்களை நாடுவதில்லை. பல காரியங்களை அவரே செய்வர். அவர் நீந்துவார்; ஆடுவார்; தோட்ட வேலை செய்வார்; தாமே எழுதுவார்; 'டைப்' அடிப்பார்.

பெல்விடியர் கோட்டையைச் செப்பஞ் செய்த பெருமை வின்ஸர் கோமகனார்க்கே உண்டு. பாழாக் கிடந்த அக் கோட்டையை அவர் ஒரு சிறு உலகாக்கி விட்டார். அங்கே என்ன இல்லை ?

கோமகனர், கோட்டையுள் குளமெடுத்தார்; சோலைக ளமைத்தார்; செடி கொடிகள் படரவைத்தார்; உலாவுமிடம், உட்காருமிடம், பேசுமிடம், ஆடுமிடம், பாடுமிடம் முதலியன வகுத்தார்; கோட்டையின் உள்ளும் பல ஒழுங்குகள் செய்தார். அவர் எதையும் தமது நேர்பார்வையிலேயே நிகழச் செய்வார் ; சில சமயம் தொழிலாளருடன் தாமுங் கலந்து கொள்வார்.

எட்டாம் எட்வர்ட் மன்னர், கல்வி யறிவும், உலக ஞானமும், சோம்பலின்மையும், சுறுசுறுப்பும், தொண்டில் நாட்டமும் உடையவராதலின், அவர் மற்ற மன்னர்களைப்போலச் செல்வக்களியாட்டில் மட்டும் அயர்ந்து கிடந்தாரில்லை. மன்னர் மன்னராகிய அவர், மக்களிடம் நேரிற் போவார் ; குறைகளைக் கேட்பார் ; அவைகளைக் களைய முயல்வார். அவர் அரண்மனைக் குகையில் உயிரற்ற சிம்மாசனத்திற் கிடந்து, உண்பன உண்டு, உடுப்பன உடுத்து, பூசுவன பூசிக் குருடராய்ச் செவிடராய் நடைப்பிணமாய் அரசு செய்தாரில்லை. அவர் ஏழை மக்கள் உள்ளமெனும் அரியாசனத்திலிருந்து உயிருள்ள மன்னராகவே அரசு செய்தார். அத்தகைய ஒருவரைப் பிரிட்டன் மன்னராகப் பெற்றும், பெறுதொழிந்தது.

வின்ஸர் கோமகனர் மன்னர்வழியில் தோன்றியும்- இருபத்தைந்தாண்டு இளங்கோவாயிருந்தும் - ஏறக்குறைய ஓராண்டு மன்னராயிருந்தும் - அவர் மனம் செருக்கில் விழுந்ததேயில்லை. அஃது அவரிடத்திலமைந்த பிறவிக் குணம்போலும்! அதுபற்றி அவர்தம் வாழ்வினின்றும் பல குறிப்புக்கள் எடுத்துக் காட்டலாம். சில வருமாறு:—

## குணநலன்

வின்ஸர் கோமகனார் ஒரு பெரும் மன்னர் வழியில் தோன்றியவர்; மன்னரானவர். அவர் தம்மை மன்னர் வழியினர் என்றோ மன்னர் என்றோ நினைத்ததில்லை. அவர் தம்மை மனிதவர்க்கத்தில் ஒருவர் என்றே எண்ணி வாழ்ந்து வருகிறார். எளிமையிலேயே அவர் மனம் படிந்து கிடக்கும். உயர்வு தாழ்வை நினைவூட்டும் மரபு, சம்பிரதாயம், வழக்கவொழுக்கம் முதலியவற்றில் அவர் சிந்தை தோய்வதில்லை. கண்மூடி வழக்கங்கட்கு அவருடைய வாழ்வு இரையாகாமலே இருக்கிறது. மன்பதையின் வளர்ச்சியைத் தகையும் கொடுமைகளை வீழ்த்துவதில் அவருக்கு ஊக்கமுண்டு. வின்ஸர் கோமகனாரை ஒரு சமரச ஞானி என்றுங் கூறலாம். பார்லிமெண்டில் அரசர் பேசும்போதெல்லாம் தம்மை "நாம்" என்று குறிப்பது மரபாக இருந்து வந்தது. எட்டாம் எட்வர்ட் மன்னரோ அம்மரபை விடுத்து, "நான்" என்றே தம்மைக் குறித்தனர்.

வின்ஸர் கோமகனார், தம் தந்தையார் இறந்ததும், தாம் அரியாசனமேறிக் குடிமக்களுக்கு வாழ்த்துக்கூற முற்பட்டார். அவ்வேளையில் கோமகனார் தம் தந்தையாரின் அருங்குணங்களைப் புகழ்ந்து, "வேல்ஸ் இளங்கோவாக என்னை நீங்கள் அறிவீர்கள். யான் ஐரோப்பாப் போரில் தலைப்பட்ட ஒருவன் என்பதும் உங்களுக்குத் தெரியும். எனது சுற்றுப்பிரயாணத்தில் யான் உங்களுடன் நெருங்கிப் பழகி யிருக்கிறேன். இப்பொழுது மன்னர் என்ற முறையில் யான் உங்களுக்கு

வாழ்த்துக் கூறினாலும், பழைய மனிதன் என்னும்
நிலையுடனேயே அக்கடனாற்றுகிறேன்" என்று உரைத்
தார்.

1914-ம் ஆண்டில் ஐரோப்பாப் பெரும்போர்
தொடங்கிற்று. அப்போரில் தாமும் ஒரு போர்வீர
ராகச்செல்லக் கோமகனார் விரைந்து நின்றார். அப்
பொழுது சேனாதிபதியாயிருந்த லார்ட் கிச்சினியர்
'வேண்டாம்' என்று கோமகனாரைத் தடுத்தார்.
தடுக்கப்பட்டும் கோமகனார் போர்க்களத்தில் புகுந்தார்.
தாம் ஓர் இளங்கோ - ஒரு மன்னர் புதல்வர் - என்ற
நினைவே அவர்க்குத் தோன்றவில்லை.

ஐரோப்பாப் போரில் காயமடைந்தவர்களைக்
காண்பதற்கென்றே ஒருமுறை வின்ஸர் கோமகனார்
பிரான்ஸுக்குச் சென்றார். அவர் வருகையைக்கண்ட
டாக்டர், ஓர் அறையில் காயமடைந்து கிடந்த ஒருவரை
வேறோர் இடுக்கில் மறைத்து விட்டார். காரணம்,
நோயாளியின் முகம் பலவழியிலும் காயமுண்டு மிகப்
பருமையாகிப் பயங்கரத் தோற்றத்தை வழங்கியதால்,
அதைக்காண இளங்கோவின் மனஞ் சகியாது என்
பதேயாகும். அவ்வறையில் இளங்கோ புகுந்தபோது
நோயாளியைக் காணோம். அவர் சுற்றுமுற்றும் பார்த்
தார்; இடுக்கிலிருந்த படுக்கையைக் கண்டார்; 'இஃ
தென்ன?' என்று கேட்டார். டாக்டர் உண்மைகூறி முகத்
தின் விகாரத்தை வருணித்தார். இளங்கோ விகார வரு
ணனையைக் கேட்டுக் கொண்டே நோயாளியினிடஞ்
சென்று மூடியை விலக்கினார்; புண் மலிவைக் கண்டார்;
முகத்தோடு முகம் வைத்து முத்தந்தந்தார்.

ஒருசமயம் எட்டாம் எட்வர்ட் ஸ்பெயின் தேசஞ் சென்றார்; பூனேஸ் நகரத்திலுள்ள ஆகாயவிமான நிலையம் போந்தார்; ஆங்கிருந்த ஆங்கிலேயருக்கு ஸ்பானிய மொழி தெரியாமை கண்டார்; கண்டு, ' நீங்கள் ஸ்பெயினில் வதிகிறீர்கள். ஆனால் ஸ்பானிய மொழியை நீங்கள் பயிலவில்லை. இது நீங்கள் வதியும் ஸ்பெயின் தேசத்துக்குக் கேடு விளைப்பதாகும் ' என்றார். இஃது எத்தகை உணர்வு? சமதர்ம உணர்வன்றோ?

மன்னர்கள் பெரிதும் ஏழை மக்கள் வாழும் இடங்கட்குச் செல்வதில்லை. அவர்கள் செல்வர்களுடன் களியாட்டயர்ந்து ' ஞாயிறு எங்கெழிலென் ' என்றிருப்பார்கள். எட்வர்டோ அப்படியில்லை. அவர் ஏழைகளின் இருக்கைகளைத் தாமே தேடிச் செல்வார்.

எட்வர்ட் ஒருபோது வடகிழக்கு இங்கிலாந்தைச் சுற்றி வந்தார். அங்கே ஓரிடத்தில் ஒரு மூலையில் ஒரு சிறு குடில் காட்சியளித்தது. அஃது அவர் மனத்தை ஈர்த்தது. அக்குடில் இரண்டே அறைகளையுடையது. அங்கே பத்துப் பேர் உணவின்றிக் கிடந்தனர். அவர்கள் நிலை எட்வர்டைக் கண்ணீர் உகுக்கச் செய்தது.

ஒருமுறை திடீரென எட்டாம் எட்வர்ட் ஒரு குடிசைக்குள் நுழைந்தார். அவ்விடத்தில் ஒரு சிறு குழவி இறந்து கிடந்தது. பெற்றோர் துயரத்தில் மன்னருங் கலந்துகொண்டார்.

மன்னர்கள் நுழையாத இடங்களிலெல்லாம் எட்டாம் எட்வர்ட் நுழைவார். ஸ்காத்லந்தில் சில பகுதிகளையும், வேல்ஸில் சில பகுதிகளையும் எட்வர்ட் நேரில் பார்த்தார் ; வேலையற்றோர் கூட்டம் பெருகியிருத்தலை

உணர்ந்தார் ; "இவர்கட்கு எவ்வழியிலாதல் வேலை கொடுக்க ஏற்பாடு செய்தல் வேண்டும்" என்று திரும்பினார்.

தொழிலாளிகள் நீண்டகாலம் ஒரு சாலையில் உழைக்கிறார்கள். வயது முதிர்ந்த நிலையில் அவர்கள் வீட்டுக்கு அனுப்பப்படுகிறார்கள். முதுமையில் அவர்கள் வாழ்வு எப்படி நடைபெறும்? அவர்கட்கு உதவி நல்க எட்வர்ட் பெரிதும் முயன்றார்.

ஓர் ஏழைக் கிழவியை எட்வர்ட் காண்டல் நேர்ந்தது. அவள் தன் மகனுக்கு உதவிச் சம்பளம் கிடைக்கவில்லை என்று கூறினாள். அவ்வுதவி உடனே கிடைக்குமாறு அவர் செய்தார்.

வேலையற்றவர்மீது எட்வர்ட் மனம் என்றும் சென்றுகொண் டிருக்கும். வேலையற்றவரைப் பற்றிப் பேச நேர்ந்த போதெல்லாம் அவர், "வேலையற்றவரும் மனிதரே. அவர்க்கும் மகிழ்ச்சி முதலியன வேண்டும். 'கிளப்புகள்' அவர்க்கும் அமைக்கப்படல் வேண்டும்" என்று வலியுறுத்துவார்.

எட்டாம் எட்வர்ட் தொழிலாளிகள் முன்னேற்றத்தில் கண்ணுங்கருத்து முடையவர். சமதர்மிகளிடத்தில் சலிப்புக் கொள்ளாது அவர் பேசுவதும் ஈண்டுக் குறிக்கத்தக்கது. இன்னும் பல குறிப்புக்களுண்டு. இத்தகைய ஒருவரல்லரோ மன்னர் பதவிக்குத் தகுதிவாய்ந்தவர்?

எட்டாம் எட்வர்ட், மன்னர் மன்னர். அவர் தொழிலாளர்களிடம் நேரே போதல், அவர்களிடம் பேசுதல், அவர்கள் குறைகளைக் களைய வழிதேடுதல் முதலிய நற்

செயல்கள், செல்வர்கட்கு - அதிலும் இங்கிலாந்து செல்வர்கட்கு - பிடியாமலிருந்தன. 'லார்டு'களும், 'பிஷப்'புகளும், 'கன்ஸர்வெட்டிவ்'களும் கூடிக்கூடிப் பேசுவார்கள்; 'என் செய்யலாம்' என்று சிந்திப்பார்கள்; 'என் செய்வது? அரசர்! அரசர் செயலை எப்படி மறுப்பது' என்று வாளா கிடப்பார்கள்; மீண்டும் சூழ்ச்சியில் இறங்குவார்கள். அவர்கள் செய்கைகளைக் கண்டுங் கேட்டும் எட்வர்ட் தமது இயற்கை நிலையினின்று மாறுபடக் கருதவேயில்லை. பதவியின் பொருட்டு நல்லோர் தமது நிலைமையினின்றும் பிறழ மாட்டார்.

செல்வர்கள் வாயிலாகச் சூழ்ச்சி மேல் சூழ்ச்சிகள் எழுந்தன; சதியாலோசனைகள் கிளம்பின. காலநிலையும், தொழிலாளர் எழுச்சியும் செல்வர்களைப் பெருமூச் செறியவுஞ் செய்தன. அவர்கள் இரவு பகல் தூங்குவதில்லை. அவர்கள் கனவிலும் எட்வர்டே. இவ்வாறு செல்வர்கள் ஏக்குறலானார்கள். அந்நிலையில் திருமதி ஸிம்ஸனது காதற் புகை எழுந்தது. அஃது எதிரிகட்கு எய்ப்பினில் வைப்பாயிற்று. அதுபற்றி அவர்கள் என்னென்னவோ நிகழ்த்தினார்கள். எவையும் எட்வர்டை அச்சுறுத்தவில்லை. அவர் எவர்க்கும் அஞ்சி மனச்சான்றை விற்றாரில்லை. மனச் சான்றுடையார்க்கு அச்சமேது?

# V காதற் காரணம்

திருமதி ஸிம்ஸன் அமெரிக்காவில் ஒரு மூலையில் பிறந்த பெண்மணி. எட்வர்டோ ஒரு பெரும் மன்னர்! இருவருக்குங் காதல் நேர்ந்தது!

அமெரிக்கக் கடலில் மிதந்த ஒரு நங்கூரத்துக்கும், இங்கிலாந்துக் கடலில் மிதந்த ஒரு கயிற்றுக்கும் தொடர்பு எப்படி ஏற்பட்டது? தற்செயல் என்று கூறுவது எளிது. தற்செயலுக்குங் காரணமிருக்குமா என்று துருவிப்பார்க்க இடமுண்டு.

எந்நிகழ்ச்சிக்குங் காரணமிருக்கும். காரணமின்றி எந்நிகழ்ச்சியும் உறாது. காரணமின்றிக் காரியமில்லை. காரணத்தைத் துருவிக் காண்பதில் பலர் கவலை செலுத்துவதில்லை; பொறுமையுடன் கவலை செலுத்தினால் காரணம் புலனாகியே தீரும்.

காரணம், புறம் அகம் என இருவகைப்படும். புறக்காரணத்தால் ஆன்ற உண்மை காண்டல் இயலாது. எதற்கும் அகக்காரணங் காண முயல்வதே அறிவுடைமை. அகக்காரணம் ஏதுக்களாலும், சான்றுகளாலும், இன்ன பிறவாற்றாலும் விளங்குதல் அரிது. ஆழ்ந்த சிந்தனை அகக்காரணத்தை நனி விளங்கச் செய்யும்.

பருவுடல் உணர்வால் சிந்திப்பது ஒருவகை. நுண்ணுடல் உணர்வால் சிந்திப்பது மற்றொருவகை. முன்னையது புறக்காரணத்தை ஒருவாறு உணர்த்தும். பின்னையது அகக்காரணத்தை நன்கு விளக்கும். நுண்ணுடற்

சிந்தனையிலும் படித்தரங்களுண்டு. சிந்தனை அடிவரையிற் செல்லுதல் வேண்டும். அவ்வாழ்ந்த சிந்தனையில் விளங்குவதே உண்மை.

நுண்ணுடலுணர்வால் ஆழ்ந்த சிந்தனையில் அமர்வது எல்லார்க்கும் இயன்ற ஒன்றன்று. அவரவர் சீலத்துக்கேற்ற அளவில் சிந்தனை செல்லும். சிந்தனையின் எல்லையிற் சென்றும்-சில சமயம் அதைக் கடந்தும்-சிந்திப்பது ஆழ்ந்த சிந்தனை யாகும். பருவுடலுணர்வில் உதயமாகும் சிந்தனை படிப்படியே வளர்ந்து செல்லும். ஒவ்வொருபடியில் ஒவ்வொருவிதக் கருவி கரணம் துணைசெய்யும். கருவிகரணத் துணையிழந்த சிந்தனை நிலையுமிருக்கிறது. அதுவே நுண்ணுடலுணர்வுபற்றிய சிந்தனை. அதை என்னென்று கூறுவது ? அதைச் சிந்தனுகாரம் என்று கூறலாம். அதற்கு மேற்பட்ட நிலையும் உண்டு.

சிந்தனை கடந்த சிந்தனை பெறுதற்குப் பல வழிகள் அமைந்துள்ளன. அவைகளுள் புத்தர் பெருமான் அறிவுறுத்திய வழியே ஈண்டைக்கு வேண்டற்பாலது. புத்தர் பெருமான் சில பயிற்சிகள் அறிவுறுத்தியுள்ளார். அவை சீலப்பயிற்சிகளாகும்.

## பௌத்த சீலமும் பழம் பிறப்பும்

சீலம், பஞ்ச சீலமென்றும், அஷ்டசீலமென்றும், தசசீலமென்றும் மூவகைப்படும். பஞ்சசீலம்:—சொல்லாமை, திருடாமை, பிறர்மனை இச்சியாமை, கள்ளுண்ணாமை, பொய் கூறாமை. இவ் வைந்துடன் உயர்ந்த பீடத்திலிருந்து துயிலாமை, மணவகை

களைப் புனையாமை, உதயத்துக்கு முன் உண்ணாமை என்னும் மூன்றுஞ் சேர அஷ்டசீலமாம். இவ்வெட்டுடன் நடனம் முதலியவற்றை விரும்பாமை, பொன் வெள்ளி முதலியவற்றைத் தீண்டாமை என்னும் இரண்டுஞ் சேரத் தசசீலமாம். இச்சீல வகைகளில் ஈடுபடுவதுக் கேற்பச் சிந்தனை நிலைகளும் அரும்பி மலர்ந்து கொண்டே போகும்.

சீலங்களை முறைப்படி கடைப்பிடித்து ஒழுகிஒழுகித் தெளிவு பெறப்பெற நுண்ணுடற் சிந்தனையில் பழம் பிறவியுணர்ச்சி தோன்றும். தமது பழம்பிறப் புணர்வைப் பெறுவோர், மற்றவர் பழம் பிறப்பையும் உணரும் ஆற்றல் பெறுவர். சீலங்கள் பலதிறக் குற்றங்களென்னுஞ் சிறைமதில்களை உடைத்து உடைத்துச் சாய்க்கவல்லன. குற்றங்கள் சாயச்சாய அகக்கண் ஒளி பெறும். அவ்வொளியால் பிறரது புறநோக்குக்குப் புலனாகாத நுண்மைகளையும், பழம்பிறப்பு முதலியவற்றையும் தெளிதல் கூடும். இதனை யோகக் காட்சி என்ப.

சித்தார்த்தர் சீலங்களை யெல்லாம் அனுஷ்டித்துப் போதி மரத்தடியில் அமர்ந்தன ரென்றும், அப்போது அவர்க்குப் பழம்பிறப் புணர்வு தோன்றிய தென்றும், அத்தோற்றத்தின் பின்னரே சத்திய சதுஷ்டயஞானம் பிறந்ததென்றும் பௌத்த சரித்திரம் கூறுகிறது. மணிமேகலையம்மையார் தானந் தாங்கிச் சீலந் தலைநின்று, பழம்பிறப் புணர்ந்த வரலாற்றை "மணிமேகலை" விளம்புகிறது. மற்றும் பல பௌத்த சரித்திரங்களும் இருக்கின்றன.

இப்பெருநிலை கூடப்பெற்றவர் அர்ஹத் என்று அழைக்கப்படுவர். 'அர்ஹத்' என்பது பாலிமொழி. அதற்குத் தமிழ்ப் பெயர் 'அறவணவடிகள்' என்பது. முன்னை நாளில் அறவணவடிகள் நிலையடைந்தோர் ஆங்காங்கிருந்து அறம்வளர்த்துச் சத்சங்கங்களைப் பெருக்கி வந்தனர். நாளடைவில் மன்பதையில் சீலம் ஒடுங்க ஒடுங்க அறவண அடிகளின் குழுக்களும் ஒடுங்கி விட்டன.

வின்ஸர் கோமகனுர்க்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் நேர்ந்த காதலின் அகக் காரணத்தை உணர்தற்கு எவ்வறவண வடிகளிடஞ் செல்வது? அறவணவடிகளைக் காணேம். அறவணவடிகளைப் பற்றிய நூலுணர்வு கொண்டு, வின்ஸர் கோமகனுர் - திருமதி ஸிம்ஸன் அம்மையார் காதலின் அகக்காரணத்தை ஊகஞ் செய்து கூற முயலலாம்.

பழம் பிறப்பைப்பற்றி ஐயுறுவோர் பலர். புத்தர் அறிவுறுத்திய சீல நெறியில் நிற்போர்க்கு எவ்வித ஐயப்பாடுந் தோன்ருது. இக்காலத்தவர் பலர் சான்ருேர் உணர்த்திய நெறிகளுள் ஏதாவதொன்றில் நின்ருெழுகாது, அந்நெறிகளை ஏட்டளவில் பயின்று, வெறுங் கல்விக்கண்மட்டுங் கொண்டு அவைகளை ஆராய்கின்றனர். அதனுல் ஐயப்பாடுகளுக்கு இடம் நேர்கிறது. அந்நெறிகளில் நின்று ஒழுகுவோர்க்குக் கல்விக் கண்ணுடன் வேறு ஒரு கண்ணுந் திறக்கப் பெறும். அக்கண்ணர்க்குப் பழம்பிறப்பு நன்கு விளங்கும்.

இந்நாளில் பழம் பிறப்பு உண்டு என்று சொல்வோரும், அஃதில்லை என்று சொல்வோரும் பெரிதும்

எட்டளவில் நிற்பவரேயாவர். வழிதுறை தெரியாமல் இரண்டு குருடர் ஒருவரோ டொருவர் முட்டிக் கொள்கிறார். உண்மை வழி காட்டுதற்கு அறவணவடிகளில்லை. என் செய்வது ? அறவணவடிக ளின்மையால் குருடர்களுக்குள் வாதப் போர் மலிகிறது.

இருள் சூழ்ந்த இந்நாளிலும் பழம்பிறப்புணர்வுடையோர் ஆங்காங்கே இலை மறை காய்போ லிருக்கிறார். அவரைப் பற்றிய செய்திகள் அவ்வப்போது பத்திரிகைகள் வாயிலாக வெளி வருகின்றன. பத்திரிகை யுலகக் கண்ணுக்குத் தோன்றாத சிலரும் இருக்கலாம். பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளை யெல்லாம் ஈண்டு நிரப்ப வேண்டுவதில்லை. வட இந்தியாவில் ஓரிளம் பெண்மணி தம் முற்பிறவியைப் பற்றியும், முற்பிறப்பின் ஊர், இல்லம் முதலியவற்றைப் பற்றியும் கூறினரென்றும், அக்கூற்றுச் சோதனையில் உறுதி பெற்ற தென்றும் பத்திரிகை யுலகம் அணித்தே தெரிவித்தது. அவ்வாறே ஐரோப்பாவில் ஓர் அம்மையார் தமது பழம் பிறப்பை உணர்த்தின ரென்றும் பத்திரிகை யுலகம் அறிவித்தது. பழம் பிறப்புண்மையைத் தெளிவதற்கு மக்கள் வாழ்க்கை விநோதங்களைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும். ஆழ்ந்த சிந்தனை உண்மையை ஒருவாறு புலப்படுத்தும்.

எட்டாம் எட்வர்டுக்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் உற்ற காதலின் அடிப்படையான காரணம், அவர்தம் பழம் பிறப்பை யொட்டியதாகவே யிருக்கும். பழம் பிறப்புணர்வு அவ்விருவர்க்கும் இல்லாம லிருக்கலாம்.

புத்தர் வழிபற்றி ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்தால், பழம் பிறப்புத் தொடர்பே காரணம் என்று ஊகித்தல் கூடும்.

## ஊழ்

பழம்பிறப்புத் தொடர்பே ஊழ் என்பது. 'ஊழ் வழி உலகம்' என்றொரு பழமொழியும் பிறந்திருக்கிறது. ஊழைத் தெளிந்து அநுபவிப்போர் விரைவில் விடுதலை அடைவர். அதைத் தெளியாது அநுபவிப்போர் விரைவில் விடுதலை எய்தார். ஊழ் மிக வலியது. அஃது எவ்வழியிலாதல் வந்து சூழும். ஊழைப் பற்றிய ஆன்றோர் உரைகள் சில வருமாறு:—

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்." —திருக்குறள்

"இறந்த பிறப்பிற்றான் செய்த வினையைப்
பிறந்த பிறப்பா லறிக—பிறந்திருந்து
செய்யும் வினையா லறிக இனிப்பிறந்
தெய்தும் வினையின் பயன்" —அறநெறிச் சாரம்

"முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிவ ராயினும்
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்"

—கந்தபுராணம்

"இடுக்கண்வந் துற்ற காலை யெரிகின்ற விளக்குப் போல
நடுக்கமொன் றானு மின்றி நகுசதா நக்க போழ்தவ்
விடுக்கணை யரியு மெஃகா மிருந்தழு தியாவ ருய்ந்தார்
வடுப்படுத் தென்னை யாண்மை வருபவந் துறுங்களன்றே"

—சிந்தாமணி

ஊழை வெல்லுதல் இயலுமா? இயலாதா? இயலும் என்றே விடையிறுக்கலாம். ஊழ் வெல்லப்படுவதொன்றன்றாயின், அஃதழியாமல் உயிரைத்தொடர்ந்து தொடர்ந்து துன்புறுத்திக் கொண்டே யிருக்கும். உயிருக்கு இன்பம் என்பதே இல்லாமற்போகும். உயிரின் இயல்போ இன்பத்தை நாடுவது. அவ்வியல்புடைய உயிர் எத்துணைநாள் ஊழுக்கு இரையாகிக்கொண்டிருக்கும்? என்றுதல் ஒருபோது உயிர் உணர்வுபெற்று ஊழின் திறனுணர்ந்து, அதை வெல்ல முயன்றேதீரும். ஆகவே, ஊழ் வெல்லுந் தன்மையதென்க.

உயிருக்குச் செயல் (Action) உண்டு என்பது வெள்ளிடைமலை. அச்செயல் நல்ல வழியிலும் நிகழும்; பிறவழியிலும் நிகழும். செயலே வினையென்றும், கர்மமென்றுஞ் சொல்லப்படும். ஒவ்வொரு செயலுக்கும் ஏதாவது விளைவிருத்தல் (Re-action) இயல்பு. ஒருவன் கொதிநீரில் கையை வைத்தான். அதனால் அவன் கையில் புண்ணுண்டாயிற்று. செயலுக்கேற்ற விளைவு நிகழ்ந்தது. விளைவாகிய புண்ணைப் போக்க மகன் முயல்வானா? வாளா கிடப்பானா? விளைவைப் போக்க அவன் முயலாது வாளா கிடப்பதில்லை. முயற்சியால் அவன் வெற்றியும் பெறுகிறான். வினையின் விளைவை முயற்சியால் வெல்லுதல் இயலும். ஊழைப் பற்றிய உணர்வு பெற்றால், அதை யொழிக்கும் முயற்சியும் உடன் தொடர்ந்து எழும்.

## சோதிடம்

தற்கால உலகில் சோதிட நூல்கள் பெருகி வருதல் கண்கூடு. விஞ்ஞானம் பெருகி வரும் மேல்நாட்

டிலும் புத்தம் புதியனவாக வான நூல்களும் சோதிடக் கலைகளும் பெருகி வருகின்றன. சோதிடக்கலை, விதியின் உண்மையை வலியுறுத்துவது; விதியால் விளையும் வாழ்வு நிகழ்ச்சிகளை விளக்குவது. 'விளைவது விளைக. சோதிடக்கலை எற்றுக்கு' என்று சிலர் கேட்கலாம். சோதிடக்கலையில் நுழைந்து பார்த்தால் அது நல்விடை பகரும். அக்கலையால் வருங்காலநிலையை உணர்தல்கூடும். அதற்கேற்ற முறையில் வாழ்வைப் பண்படுத்திக் கொள்ளும் முயற்சியெழும். ஆகவே, முயற்சியால் விதியின் விளைவை வெல்லுமாறு தூண்டுவது சோதிடக் கலையென்க. விதியை வெல்வதற்கு அறிவு கொளுத்தவே அக்கலை ஏற்பட்டது. அஃதொரு விஞ்ஞானக்கலை.

## விதியை வெல்கை

சோதிடம் பார்த்தும், பின்விளைவை உணர்ந்தும் வாளா கிடந்தால், விதி தன்வேலையைச் செய்தேதீரும். விதிக்கு வாழ்வு இரையாகும். விதியை வெல்லுதற்கென்று எம்முயற்சியில் தலைப்படுவது? முயற்சிக்குரிய வழிகள் எத்தனையோ கோலப்பட் டிருக்கின்றன. அவரவர் மனத்துக்கிசைந்த வழியில் நின்றொழுகலாம்.

நந்தமிழ் நாட்டிற் றோன்றிய பெரியோர் பலர். அவருள் தலைசிறந்தவரெனப் பலரால் போற்றப்படுவோர் திருவள்ளுவர். அவர் அருளிய நூல் பொதுமறை என்றும் போற்றப்படுகிறது. அவர்தம் நூற்கண் 'ஊழ்' என்னும் ஓர் அதிகாரமும், 'ஆள்வினையுடைமை' என்னும் மற்றுமோர் அதிகாரமும் இருக்கின்றன. அவ்விரண்டையும் கூர்ந்து கூர்ந்து உன்னுதல் வேண்டும்;

உன்ன உன்ன ஊழின் வலியும், அதைத் தவிர்க்கும் வழியும் நன்கு புலனாகும். "ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று - சூழினுந் தான் முந்துறும்" என்று 'ஊழ்' அதிகாரத்திற் கூறிய திருவள்ளுவரே, "ஊழை யும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித் - தாழா துஞற்று பவர்" என்று 'ஆள்வினை யுடைமை' அதிகாரத்திற் கூறியுள்ளார். ஊழைப் புறங் காண்டல் கூடும் என் பது திருவள்ளுவர் உள்ளக் கிடக்கை. ஊழைப் புறங்காண்டற்கு ஆள்வினை உடைமை வேண்டற் பாலது என்று அப்பெரியார் அறிவுறுத்தி யிருத்தல் காண்க.

முயற்சி பலதிறம். அவைகளுள் தலையாயது ஆண் டவன் திருவடியைப்பற்றி வாழ்வது. அப்பற்றால் ஊழ் ஒதுங்குவது ஒருதலை. நாள் கோள்களின் தாக்குத லால் உயிர்கள் பல வகை வினைகளில் ஈடுபடுகின்றன. நாள்கோள்களின் தாக்குதல் உயிர்கட்கில்லை என்று கூறு தலாகாது. திங்களின் நிலவுகாலுதலுக்கும், கடல் நீருக் கும் தொடர்பிருத்தல் வெளிப்படை. நிலவின் தாக்கு தல் கடல் அலையைப் பெருக்குதல் கணகூடு. முழு நிலாவின்போது கடற்கன்னி பொங்கிப் பொங்கி மகிழ்ச்சி யுறுகிறாள். அம்மகிழ்ச்சி எத்துணைப் புலவர்க்கு விருந்தா கிறது. அவ்விருந்தமுதம் பாடல்களாய் நமக்கு இன் பூட்டுகிறதன்றோ? நாள்கோள் தாக்குதல் உலகுக் குண்டு என்பதற்கு இஃதொரு சான்றாகும்.

நாள்கோள்கள் சடப்பொருள்கள். அவைகள் அறி வுப் பொருளொன்றால் இயங்குகின்றன. அவ்வறிவி னிடத்துக் கருத்தைச் செலுத்தின், நாள்கோள் தாக்கு

தலில் தொடக்குண்டு வருந்த வேண்டுவதில்லை. நாள் கோள்களை இயக்கும் பரம்பொருளை மறந்து, அவை களை மட்டுங் கருதிக் கொண்டிருந்தால் வாட்டந் தீரா தென்க.

நாள்கோள்கள் ஆண்டவனால் இயங்குவன. அவ் வியக்கத்தால் தீமையேயில்லை. அவையாவும் உயிர்களின் நன்மைக்கென்றே இயங்குகின்றன. அவைகளின் இயக் கத்தின் வழி வாழ்வு நடந்தால் எல்லாம் நல்லனவாகவே விளையும். அதற்கு மாறுபட்டு வாழ்வு நடந்தால் தீமையே விளையும். நாள்கோள்களின் இயக்கத்தின்வழி நடக்கும் வாழ்வும், அவைகளை இயக்கும் ஒன்றனிடத்தில் மனம் படிந்தாலன்றி அரும்பாது. ஆதலால் இறையடி உணர்வு இன்றியமையாதது என்பது தெளிதற்பாலது.

நாள்கோள் என்பன எல்லாம் இயற்கையின் பரி ணாமமேயாகும். இயற்கை, இறையின் உடல். இறை, இயற்கையின் உயிர். இரண்டும் பிரிவின்றி இருப்பன. இயற்கை - இறைவழி நின்றொழுகினால் தீமை விளைவ தில்லை. நாள்கோள்களெல்லாம் நலஞ் செய்யவே இயங் கிக்கொண் டிருக்கின்றன. அந்நுட்பம் அடியவர்கட்கு நன்கு விளங்கும்.

“வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழன் வெள்ளி
சனிபாம் பிரண்டு முடனே
ஆசறு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே.”

"என்பொடு கொம்பொ டாமை யிவைமார்பிலங்க
எருதேறி யேழை யுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தென்
உளமே புகுந்த அதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொ டாறும்
உடனாய நாள்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல அவைநல்ல நல்ல
அடியா ரவர்க்கு மிகவே."—சம்பந்தர்

"நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமும்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே"
—அருணகிரிநாதர்

"விதியை மதியால் வெல்லலாம்" என்றொரு மூதுரை நமது நாட்டில் வழங்கி வருகிறது. அவ்வுரையையொட்டி எழுந்த கதைகள் பல. அவைகளுள் சிறந்த ஒன்று மார்க்கண்டருடையது. மார்க்கண்டர் வளர்ந்து வந்தார்; பதினாறு வயது உறலானார். அவர் பதினாறு வயது உற்றதும் அவர்தந் தாய் தந்தையர் சோர்வடைந்தனர். சோர்வின் காரணத்தை மார்க்கண்டர் பெற்றோரால் உணரப்பெற்றார்; நாள்கோள் தாக்குதலையும், அதற்குத் தாரகமாயுள்ள கடவுளின் அருட்டன்மையையும் செவ்வனே தெளிந்தார். விதி என்பது ஆண்டவனை மறந்தவரிடமே வலி செய்வ தென்பதும், மற்றவரிடம் அஃது அணுகாதொழியும் என்பதும் அவருக்கு விளங்கின. உடனே அவர் ஆண்டவன் திருவடியில் உறுதி கொண்டு தவங்கிடந்தார். ஆண்டவன் அருள் அவர்தம் மரண நிலையைப்

போக்கிற்று. மார்க்கண்டர் ஆண்டவனருளால் விதியை வென்றார்.

"தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே" —திருமூலர்

நாள்கோள் முதலியவற்றை இறையென்று வாழ்த்தி வணங்குதல் கூடாதென்றும், அவைகளை யெல்லாம் படைத்து அவைகளை உயிர்களின் நன்மைக்காக இயக்கும் ஆண்டவன் ஒருவனே பெரியவனென்றும், அவனையே வாழ்த்தி வணங்குதல் வேண்டுமென்றும் நபிகள் நாயகம் அருளிச்செய்ததும், மனிதன் பாவத்தினின்றும் விடுதலை யடைதற்குப் பாவமற்ற பரமனையே நினைந்து நினைந்து உருகி உருகி அழுதல் வேண்டுமென்றும், அழுகையால் பாவம் கழுவப்படு மென்றும் கிறிஸ்து பெருமான் போதித்ததும் ஈண்டுக் கருதற்பாலன.

திருவருள் வழி நிற்பவராலேயே விதியை வெல்லு தல் கூடும். மற்றவரால் விதியை வெல்லுதல் இயலாது. விதியை வெல்லுதற்குப் பழம் பிறப்புணர்வு தேவை. அதற்குப் புத்தர் முதலிய பெரியோர் வழிகோலியுள் ளார். அவ்வழியில் நின்று ஒழுக ஒழுகப் பழம் பிறப் புணர்வு அரும்பும்.

திருமதி ஸிம்ஸனையும், எட்வர்டையும் காதலாற் பிணித்தது முன்னையூழென்றே ஊகித்துக் கூறலாம். ஊழ் எவ்வாறு படர்ந்து இருவரையும் பிணித்தது?

# VI காதற் கனிவு

இங்கிலாந்தில் திருமதி ஸிம்ஸன் ஒரே இடத்தில் வாழ்ந்து வந்தாரில்லை. அவர் பல இடங்களில் வாழ்ந்து வந்தார். ஒரே இடம் அவருக்கு மகிழ்ச்சியூட்டுவதில்லை. அடிக்கடி இடம்மாற்றுவதால் அவருக்கு இன்பம் பெருகும்போலும்!

திருமதி ஸிம்ஸன் யாண்டு வதியினும், ஆண்டுள்ளாருடன் உறவு கொள்வது அவர்தம் இயல்பு. இளம் பெண்ணாண்களிடைக் காலங் கழிப்பதில் திருமதி ஸிம்ஸனுக்கு அதிக விருப்பம். இளஞ் சூழலிலுள்ள இன்பம் வேறெதிலுண்டு? அந்நுட்பம் திருமதி ஸிம்ஸன் வாழ்வில் படிந்து உறைந்து ஒன்றுபட்டது.

இளஞ் சூழலிடை நிலவைக் கான்றிக்கொண்டிருந்த திருமதி ஸிம்ஸனது திங்கள் வதனம் எப்படியோ வேல்ஸ் இளங்கோவைக் கவர்ந்தது. இளங்கோவின் நெஞ்சம், அத்திங்கள் நிலவில் ஈடுபட்டது. அந்நிலவு மழையில் அவர் மூழ்கினார்; திளைத்தார்; தண்மை அமுதை இனிது உண்டார். அவ்வமுதம் இருவருக்கும் கெழுதகை நட்பை உண்டாக்கிற்று. நட்பு, அரும்பி மலர்ந்து காய்த்து நாளடைவில் காதலாகிக் கனிந்தது.

வின்ஸர் கோமகனார் இளங்கோவாயிருந்த ஞான்றே அவர்க்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் காதல் விளைந்தது. அச்செய்தி காற்று வழியாகப் பறந்து ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் செவியிலும் நுழைந்திருக்கும். தொடக்கத்தில் அச்செய்தி கருவறையில் அடங்கி ஒடுங்கிக் கிடந்திருக்கும்.

இளங்கோ அரசராகிய பின்னர் அவர் திருமதி ஸிம்ஸனிடங் கொண்ட காதல் படிப்படியே வெளியாயிற்று. அக்காதற் செய்தி வெளியாக வேண்டுமென் பதே அரசரது விருப்பம். அது வெளியாகும் முறையிலேயே அவர் நடந்து வந்தார்.

## சில குறிப்புகள்

திருமதி ஸிம்ஸன், கோமகனார் உள்ளத்தில் எப்படி இடம் பெற்றார்? இதைப் பற்றிய விவரங்கள் பலபடச் சொல்லப்படுகின்றன. அவைகளுள் சிலவற்றை ஈண்டுப் பொறித்தல் சாலும்.

லண்டனில் ஆங்கிலோ - அமெரிக்கச் சங்கம் என்றோர் அமைப்பிருக்கிறது. அச்சங்க அங்கத்தவர் பலர் கோமகனார் நண்பர். நண்பருடன் கோமகனார் அச்சங்கம் போவார். சங்கத்தின் சிற்சில அங்கத்தவர்க்குத் திருமதி ஸிம்ஸன் விருந்தளிப்பது வழக்கம். விருந்து, கோமகனார் உள்ளத்தில் திருமதி ஸிம்ஸனை மிளரச் செய்தது.

1931-ம் ஆண்டு பெல்விடியர் கோட்டையில் ஒரு விருந்து நடந்தது. அவ்விருந்துக்குத் திரு. ஸிம்ஸனும், திருமதி ஸிம்ஸனும் அழைக்கப்பட்டனர். அவ்வழைப்பு இருவருக்குங் களிப்பெருவகை யூட்டிற்று. இருவரும் போந்து விருந்துண்டனர். அச்செய்தி, விருந்தில் கலந்திருந்த திரு. பென்ஜமென் தாவாலும், அவர்தம் மனைவியாலும் பின் நாளில் வெளி வந்தது.

1934-35-ல் கோமகனார் பிரான்ஸ், ஆஸ்திரியா முதலிய இடங்களுக்குச் சென்றபோதெல்லாம் குறிப்

பிட்ட சிலர் அவருடன் போந்தனர். அவருள் திருமதி ஸிம்ஸனும் ஒருவரென்று சொல்லப்படுகிறது.

கோமகனார் அளிக்கும் விருந்துகளுக்கு அழைக்கப்படும் நண்பர்களது பெயர்களின் அட்டவணையில் திரு. ஸிம்ஸன் பெயரும், திருமதி ஸிம்ஸன் பெயரும் விளங்கினமை ஈண்டுச் சிறப்பாகக் குறிக்கத் தக்கது.

அரண்மனையில் மன்னராவார் ஏழைமக்களுக்குத் தானஞ்செய்வது வழக்கம். அத்தானம் காண்டர்பரி ஆர்ச் பிஷப் முன்னிலையில் வழங்கப்படுவது மரபு. எட்டாம் எட்வர்ட், மன்னராயதும் முறைப்படி முதல் முதல் ஏழை மக்களுக்குத் தானம் வழங்கப் புறப்பட்டார். அவ்வேளையில் சிலர் அழைக்கப்பட்டனர். அவருள் திரு ஸிம்ஸனும், திருமதி ஸிம்ஸனும் பொலிவுடன் வீற்றிருந்தனர். மன்னர், ஆர்ச் பிஷப் பக்கத்தில் அமர அசைந்து நடந்தபோது, அவர்தம் விழிகள் திருமதி ஸிம்ஸனிடம் நடந்தனவாம்.

1936-மே 28-ல் ஒருபெரும் அரச விருந்து நடைபெற்றது. அதற்கு மந்திரிகள், பிரதானிகள், பிரபுக்கள் முதலியவர்கள் அழைக்கப்பட்டார்கள். அவர்கள் பெயர்கள் பத்திரிகைகளில் வெளிவந்தன. அப்பெயர்களுடன் திரு ஸிம்ஸன் - திருமதி ஸிம்ஸன் பெயர்களும் காட்சியளித்தன. அக்காட்சியே பொது மக்களின் கருத்தை முதல் முதல் ஈர்த்தது. அம்முறையில் ஸ்காட்லந்தில் நடைபெற்ற விருந்திலும் திருமதி ஸிம்ஸன் பெயர் பத்திரிகையுலகில் புகலாயிற்று. அவ்விருந்தில் மன்னர் தம்பிமாரும், அவர்தம் மனைவிமாரும், மற்ற அரச குடும்பத்தினரும் கலந்திருந்தனர். அவ்விருந்துச் செய்தி பிரிட்டனையே கலங்கச் செய்தது.

எட்டாம் எட்வர்ட், பெல்விடியர் கோட்டையில் அடிக்கடி தேநீர் விருந்து வைப்பார். தேநீர் விருந்து காரணமாகத் திருமதி ஸிம்ஸன் பெல்விடியர் கோட்டைக்குப் பன்முறை போதருவார். திருமதி ஸிம்ஸனின் தோற்றம் சிலருக்கு வியப்பூட்டியே வந்தது.

## அரச குடும்பம்

முதலாவது அரச குடும்பத்தினர் நிலைமையை நோக்குவோம். அரச குடும்பத்தில் தலையாயவர் மேரி ராணியாரே யாவர். அவர்தம் நெஞ்சம், எட்வர்ட் - ஸிம்ஸன் காதல்மீது படியலாயிற்று. அவரது நெஞ்சில் அவ்வெண்ணமே பெரிதும் குடிகொண்டது; வேறு எண்ணம் எழினும் அது நிலைத்து நிற்பதில்லை. தாய்மை நெஞ்சம் இருவர் காதலைப்பற்றி என்னென்னவோ நினைத்திருக்கும்.

ஒருநாள் எட்வர்ட் மன்னராகிய தம் புதல்வருடன் அவரது திருமணம் பற்றி, மேரி ராணியாராகிய அன்னையார் பேசுதல் நேர்ந்தது. அன்னையார் பரிவுடன் மைந்தர் முகம் நோக்கி, "எனது ஆருயிர் மைந்த! உனது மணத்துக்கு எதிர்ப்பு நாட்டில் பலமாயிருக்குமென்று நினைக்கிறேன்" என்று சொற்றனர். அதற்கு மைந்தர், "எதிர்ப்பு இராது. பொது மக்கள் என்பால் அன்புடையவர்கள்" என்று பதிலிறுத்தார். அப்பதிலால் மைந்தர் மனோ நிலையை அன்னையார் நன்கு உணரலானார். மைந்தர் மனோ நிலையை மாற்றல் அரிது என்பதையும் அவர் கண்டார்.

அதற்குமேல் மேரி ராணியார் என் செய்தார்? திருமதி ஸிம்ஸனின் குணங்களை ஆராயத் தலைப்பட்டார்.

திருமதி ஸிம்ஸனுடன் அவர் உரையாடத் தொடங்கினர். இருவரும் நன்கு கலந்து கலந்து பேசலானர். அப்பேச்சின் பயனாக மேரி ராணியார்க்குத் திருமதி ஸிம்ஸனின் நல்லியல்புகள் பல புலனாயின. தம் மைந்தர்க்குத் தக்கவர் திருமதி ஸிம்ஸன் என்ற முடிவை மேரி ராணியார் பெற்றார்.

திருமதி ஸிம்ஸனின் அழகும், பழமை விருப்பும், கோயிலுக்குப் போதலும், இன்ன பிறவும் மேரி ராணியாரின் உள்ளத்தைக் கவர்ந்தன. மேரி ராணியார் பழமையில் விருப்புடையார் என்பதும், கோயிலுக்குப் போவோர் என்பதும் உலகறிந்தவை. தம்மியல்புகள் சில, திருமதி ஸிம்ஸனிடத்தில் பொலிந்துள்ளமை மேரி ராணியாரை மயக்கி யிருக்கலாம்.

அன்னையாராகிய மேரி ராணியாரின் இசைவினைப் பெற மைந்தர் முயன்றார்; முயற்சியில் வெற்றியும் பெற்றார். அரச குடும்பத்தின் தலைவர் கருத்தே மற்றவருடையதுமாயிற்று. அரச குடும்பத்தில் கருத்து வேற்றுமை அற்றுவிட்டது.

## அமைச்சர்

இரண்டாவதாக எவர்மீது மன்னர் பெருமான் கருத்துச் செலுத்தல்வேண்டும்? அமைச்சர்-முதலமைச்சர்-மீது என்று சொல்லவேண்டுவதில்லை. கோடைகாலத்தில் ஒருநாள் எட்டாம் எட்வர்ட் தம் முதல் அமைச்சர் திரு பால்டுவினையும், அவர்தம் மனைவியாரையும் தேநீர் விருந்துக்கு அழைத்தார். இருவரும் போந்தனர். திருமதி ஸிம்ஸனும் ஆங்கிருந்தார். எல்

லாரும் விருந்துண்டனர். மன்னர் தங்கருத்தை முதல் அமைச்சரிடங் குறிப்பாகத் தெரிவித்தார். அதற்குப் பின்னரே மன்னர் துருக்கி முதலிய பல விடங்களுக்குத் திருமதி ஸிம்ஸனுடன் சென்றார். அச்செலவே நிலைமையை உலகறியச் செய்தது. ஆயினும் பிரிட்டிஷ் பத்திரிகை யுலகம் வாய் பொத்தியே கிடந்தது. இது பெரும் வியப்பு! அமெரிக்கப் பத்திரிகை யுலகம் மட்டும் ஆரவாரம் செய்தது.

## ஆர்ச் பிஷப்பின் ஆத்திரம்

முடிசூட்டலிலும் திருமணத்திலும் சமயச்சடங்கு ஆற்றும் பொறுப்பேந்தியுள்ள காண்டர்பெரி ஆர்ச் பிஷப்பும், திருமதி ஸிம்ஸனைப் பார்த்தல் நல்லது என்று மன்னர் கருதினார் போலும் ! அவரையும் மன்னர் ஒரு நாள் தேநீர் விருந்துக்கு அழைத்தார். ஆர்ச்பிஷப்பும் அழைப்புக் கிணங்கிப் பெல்விடியர் கோட்டைக்குச் சென்றார். ஒரு சிறு கூட்டம் அங்கே வீற்றிருந்தது. அஃது இளங் காவெனத் திகழ்ந்தது. அதனிடை ஸிம்ஸனின் மதிநிலவு பொழிந்து தண்மை விருந்தூட்டிக் கொண்டிருந்தது. அதைப் பிஷப் கண்டார். அது பிஷப்புக்கு எரியூட்டிற்று. அவர்தம் மனம் வெகுண்டது ; உதடுகள் துடித்தன ; கண்களில் பொறிகள் பறந்தன ; காதுகளில் புகை எழுந்தது ; மெய் விதிர்விதிர்த்தது. பெரியவர் காலை பின்னே எடுத்து வைத்து வைத்துத் திரும்பினார்.

திரும்பினவர் யார் ? பிஷப் - பெரிய பிஷப் ; கிறிஸ்துவின் ஆலயத்தில் ஜெபஞ் செய்வோர்; கிறிஸ்து

வின் சுவிசேஷத்தைப் பரப்புந் தொண்டேற்றிருப்பவர். அவர் ஓர் ஏழை மகளுடன் தேநீர் அருந்த விரும்பினு ரில்லை. அவர்க்கும், பாவிகளுக்காக வந்த எளிய கிறிஸ்துவுக்கும் ஏதாயினுந் தொடர்பிருக்குமா ?

"பின்பு, வீட்டில் அவர் பந்தி யிருக்கையில், இதோ, ஆயக்காரரும் பாவிகளும் அநேகர் வந்து இயேசுவோடும் அவர் சீஷரோடும் பந்தி யிருந்தார்கள். அதைக் கண்ட பரிசேயர் அவர் சீஷரிடத்தில் : உங்கள் போதகர் ஆயக்கார ரோடும் பாவிகளோடும் போஜனம் பண்ணுகிறதென்ன என் றூர்கள். அவர் அதைக் கேட்டு : பிணியாளிகளுக்கு வைத் தியன் வேண்டியதே யல்லாமல் சுகமுள்ளவர்களுக்கு வேண் டியதில்லை. நீங்களோ போய், பலியையல்ல இரக்கத்தையே விரும்புகிறேன் என்பதின் பொருளைக் கற்றுக்கொள்ளுங் கள் ; நீதிமான்களையல்ல பாவிகளையே அழைக்க வந்தேன் என்றூர்."—மத்தேயு : 9 : 10-13.

இத் திருமொழியை நோக்குங்கள்; கிறிஸ்து பெரு மானை நினையுங்கள் ; அவர் பாவிகளிடை நின்று கண் ணீர் உகுக்குங் காட்சியைக் காணுங்கள் ; கிறிஸ்து பெருமான் உலகுக்கு ஏன் வந்தார் ? எவருக்காக வந் தார் ! எவருக்காகச் சிலுவையில் தொங்கினுர் ! நேயர் களே ! உன்னுங்கள் ! அவரடித் தொண்டு செய்தற் கெனக் கோலங் கொண்டவர் பெரிய பிஷப். அவர் ஓர் எளிய பெண் அணங்கைக் காய்கிறூர்! அவருடன் தேநீர் அருந்த மனங்கொள்ளாது திரும்புகிறூர் ! ஏன் ?

பெரிய பிஷப் செல்வர் ; செல்வத்தில் புரள்வோர் நேயர். அவர் எளிய கிறிஸ்துவுக்கு எங்ஙனம் நேயராதல்

கூடும் ? கிறிஸ்து பெருமானுக்கு வேண்டுவது அன்பு ; வெறுங் கோலமன்று.

"வேதபாரகரைப்பற்றி எச்சரிக்கையா யிருங்கள். அவர்கள் நீண்ட அங்கிகளைத் தரித்துக்கொண்டு திரிய விரும்புகிறார்கள்: சந்தை வெளிகளில் வந்தனங்களையும், ஜெபாலயங்களில் முதல் ஆசனங்களையும், விருந்துகளில் முதல் இடங்களையும் விரும்புகிறார்கள். விதவைகளின் வீடுகளையோ பட்சித்துப் பார்வைக்கு நீண்ட ஜெபஞ் செய்கிறார்கள். அவர்கள் அதிகத் தண்டனை பெறுவார்கள் என்றார்."—மார்க்கு : 12 : 38 - 40.

என்றும்,

"மாயக்காரராகிய வேதபாரகரே, பரிசேயரே, ஐயோ உங்களுக்குக் கேடாம்! வெள்ளையடித்த கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள். அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப்படும். உள்ளேயோ மரித்தவர்களின் எலும்புகளும் சகல அசுத்தங்களும் நிறைந்திருக்கின்றன. அப்படியே நீங்களும் புறம்பே மனுஷருக்கு நீதிமான்களென்று காணப்பட்டும் உள்ளேயோ மாயத்தினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்திருக்கிறீர்கள்."—மத்தேயு : 23 : 27 - 8.

என்றும்

கிறிஸ்து பெருமான் திருவாய் மலர்ந்துள்ள மெய்ம்மொழிகளை நோக்குக ; நோக்கிப் பிஷப்பின் நிலையை ஆராய்க.

மேல்நாட்டில் பிரபுக்கள் (முதலாளிகள்) கூட்டமென்று ஒன்றுண்டு. அக்கூட்டத்தின் ஆக்கத்துக்கென்றே பல பிஷப்புகள் வாழ்கிறார்கள். அவர்கள் எங்ஙனம் கிறிஸ்துவின் தொண்டர்களாயிருத்தல் கூடும் ?

"அவர் (கிறிஸ்து) வழி நடந்து வெளியே செல்லுகையில் ஒருவன் அவரிடம் ஓடிவந்து முழங்கால் படியிட்டு:நல்லபோத

கரே,நித்திய ஜீவனைச் சுதந்தரிப்பதற்கு நான் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டான். அதற்கு இயேசு : நீ என்னை நல்லவர் என்று சொல்வானேன்? **கடவுள் ஒருவரே தவிர நல்லவர் ஒருவருமில்லையே.** நீ கற்பனைகளையறிவாய்:கொலை செய்யாதே, விபசாரஞ் செய்யாதே, களவு செய்யாதே, பொய்ச்சாட்சி சொல்லாதே, வஞ்சனை செய்யாதே, உன் தகப்பனையும் உன் தாயையும் கனம்பண்ணு என்பவைகளே என்று சொல்ல, அவன் : போதகரே, இவைகளை யெல்லாம் என் சிறுவயது முதல் கைக்கொண்டிருக்கிறே னென்றான். இயேசு அவனை உற்றுநோக்கி அவனில் அன்பு கூர்ந்து : உன்னிடம் ஒரு குறைவு உண்டு. நீ போய் உனக்குண்டான வைகளை விற்றுத் தரித்திரருக்குக் கொடு ; அப்பொழுது பரலோகத்தில் உனக்கு ஐசுவரியமிருக்கும் ; அப்பால் வந்து என்னைப் பின்பற்று என்றார். அவன் மிகுந்த ஆஸ்தியுள்ள வனாயிருந்தபடியால் இந்த வார்த்தையைக் கேட்டு முகம் வாடித் துக்கத்தோடே போய்விட்டான்.

அப்பொழுது இயேசு சுற்றிப்பார்த்துத் தமது சீஷரிடம்: ஐசுவரியமுள்ளவர்கள் கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப் பது எவ்வளவு அரிது என்றார். சீஷர்கள் அவருடைய வார்த் தைகளைக் கேட்டுப் பிரமித்துப்போனார்கள். இயேசு பின் னும் அவர்களைப் பார்த்து : பிள்ளைகளே, கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப்பது எவ்வளவு அரிது. **ஐசுவரிய வான் கடவுளின் ராஜ்யத்தில் பிரவேசிப்பதைப் பார்க்கி லும் ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளிது என்றார்''**—மார்க்கு: 10 : 17 - 25.

இத்திருமொழிகளில் இரண்டு பொருள் சிறந்து விளங்குகின்றன. ஒன்று, நல்லவர் எவர் என்பது ; மற் றொன்று, செல்வக் களியாட்டயர் வோர் கடவுள் பிள்ளை களாதல் அரிது என்பது. பிஷப், தம்மை நல்லவரெனக்

கருதியே திருமதி ஸிம்ஸனைக் கடியலானார்; செல்வர் வழி நிற்கலானார். இவர்க்கும் கிறிஸ்துவுக்கும் எப்படித் தொடர்பு ஏற்படும்?

'சுவிசேஷ'த்திலுள்ள மற்றுமொரு போதனை இங்கே நினைவிற்கு வருகிறது. அது வருமாறு:—

"இயேசுவோ ஒலிவமலைக்குப் போனார். காலையிலே அவர் திரும்பவும் தெய்வாலயத்திற்கு வந்தார். ஜனமுழுதும் அவரிடம் வரவே, அவர் உட்கார்ந்து அவர்களுக்கு உபதேசஞ்செய்தார். அப்பொழுது விபசாரத்தில் பிடிபட்ட ஒரு ஸ்திரீயை வேதபாரகரும் பரிசேயரும் அவரிடங்கொண்டு வந்து நடுவே நிறுத்தி: போதகரே, இந்த ஸ்திரீ விபசாரத்தில் கையுமெய்யுமாய்ப் பிடிபட்டாள். இப்படிப்பட்டவர்களைக் கல்லெறிந்து கொல்ல வேண்டுமென்று மோசே நியாயப்பிரமாணத்தில் நமக்குக் கட்டளையிட்டிருக்கிறாரே; நீர் சொல்லுகிறதென்ன என்றார்கள்; அவர்மேல் குற்றஞ் சுமத்த வேண்டுமென்று அவரைச் சோதிக்கும்படி இப்படிச் சொன்னார்கள். இயேசுவோ குனிந்து விரலினால் தரையிலே எழுதிக்கொண்டிருந்தார். அவர்கள் ஓயாமல் அவரைக் கேட்டுக்கொண்டிருக்கையில் அவர் நிமிர்ந்து அவர்களைப் பார்த்து: உங்களில் பாவமில்லாதவனெவனோ அவன் முதலாவது இவள்மேல் கல்லெறியக்கடவனென்று சொல்லி அவர் மறுபடியும் குனிந்து தரையிலே எழுதிக்கொண்டிருந்தார். அவர்களோ அதைக்கேட்டுத் தங்கள் மனச்சாட்சியினால் கடிந்து கொள்ளப்பட்டுப் பெரியோர் முதல் கடையானவர் வரைக்கும் ஒவ்வொருவராய்ப் போய் விட்டார்கள். இயேசு அங்கே தனியே இருந்தார்; அந்த ஸ்திரீயும் எதிரே நின்றாள். இயேசு நிமிர்ந்து அந்த ஸ்திரீயைத் தவிர வேறொருவரையுங் காணாமல்: அம்மா, உன்மேல் குற்றஞ் சாட்டினவர்கள் எங்கே? உனக்கு ஆக்கினைத்

*தீர்ப்பிடுகிறதில்லே; நீ போ, இனி பாவஞ்செய்யாதே என்ருர்"*—யோவான் : 8 : 1 - 11.

*இது பிஷப்புக்குத் தெரியாதோ? தெரியும்; நன்ருகத் தெரியும். தெரிந்தும் என்ன பயன்? சுவி சேஷத்தைப் படிப்பதால் மட்டும் பயன் விளையாது. அது வாழ்வில் ஒன்றுதல் வேண்டும்; ஒன்றினுல் பிறர் குற்றம் பாராட்டும் இயல்பு ஒழியும்; மன்னிக்கும் குணம் பெருகும்.*

*மேல்நாடு அமைப்பில் பேர்பெற்றது. அவ்வமைப் புப்பேய், சமயத்திலும் நுழைந்துகொண்டது. மேல் நாட்டில் கிறிஸ்துவின் பெயரால் அமைப்புகள் நன் முறையில் நிறுவப்பட்டுள்ளன. அவ்வமைப்புகள், அரசியலார் அமைப்புகளேப் போலவே கடனுற்றி வரு* கின்றன. அமைப்புக்களுக்கு அடிமை பூண்ட மேல்நாடு அன்புக் கிறிஸ்துவை மறந்து விட்டது. அமைப்புக்க ளால் பணம் பெருகப் பெருக, பணத்தால் பாதிரிக் கூட்டம் பெருகி நிற்கிறது. மேல்நாடு ஒரு பெரிய சுடுகௗ மாய் - வெடி நிலனுய்-இருப்பதற்குக் காரணம் என்ன? கிறிஸ்துவின் அன்பு ஆண்டுப் பரவாதிருப்பதேயாகும். கிறிஸ்துவின் பெயரால் அமைப்புகள் ஆயிரக்கணக்கில் கிடக்கின்றன. கிடந்தும் பயனென்ன? அவைகளில் அன் புக் கிறிஸ்துவுக்கு இடனுண்டோ?

*"என்னுடைய வீடு ஜெபவீடு எனப்படுமென்று எழுதி யிருக்கிறது. நீங்களோ அதைக்* கள்ளர்குகைகளாக்குகிறீர் *களே என்ருர்"*—மத்தேயு : 21 : 13

*"என் பிதாவின் வீட்டை வியாபார வீடாக்கவேண்டாம்"*

—யோவான் : 2 : 16

"நரிகளுக்குக் குழியுண்டு, ஆகாயத்துப் பறவைகளுக்குக் கூடுகளுண்டு, மனுஷ குமாரனுக்கோ தலைசாய்க்க இடமில்லை என்றார்"—**மத்தேயு** : 8 : 20.

மேல் நாட்டில் பிஷப்புகள் பிரபுக்களுக்காக வாழ்கிறார்கள்; கிறிஸ்துவுக்காக வாழ்கிறார்களில்லை. அதனால் அந்நாடு கோலைக்களத்தை விட்டது.

காண்டர்பெரி ஆர்ச்பிஷப் செயலைச் சிந்தியுங்கள். அவர் கிறிஸ்துவை மறந்தே திருமதி ஸிம்ஸனை வெறுத்தார். எளிய ஸிம்ஸனைக் கருணைக் கிறிஸ்து காப்பாராக. கனிந்த காதலைக் குலைக்கப் பின்னே சூழ்ச்சிகள் படைப்படையாக எழுந்தன.

# VII சூழ்ச்சி

எட்வர்ட் - ஸிம்ஸன் காதல் கனிந்து நீடியாதென்றும், எப்படியாவது அது முறிந்து போகுமென்றும் பிரபுக்கள் கருதி, அதன்மீது கவனஞ்செலுத்தாதிருந்தார்கள். பின்னை நிகழ்ச்சிகளை நோக்க நோக்க அவர்கள் வாளாகிடக்க விரும்பினார்களில்லை. காதல் மணமாக முடியும் என்ற உறுதி அவர்கட்கு ஏற்பட்டது. திருமதி ஸிம்ஸன் மணவிலக்குக்கென்று திரு. ஸிம்ஸன்மீது தொடுத்த வழக்கில் வெற்றி பெற்றமை பிரபுக்களை நடுக்குறச் செய்துவிட்டது. அவர்கள், மன்னர் முடிசூட்டு விழா மே மாதத்தில் நடைபெறுமென்றும், அதற்குள் அதாவது ஏப்ரலுக்குள் ஆறுமாதத் தவணையுந் தீர்ந்துவிடுமென்றும், மன்னர் மணமுடித்தே முடிசூட்டிக் கொள்வரென்றும், மன்னரோ ஏழைகளிடத்தில் இரக்கமுடையவரென்றும், அவருடன் மற்றுமோர் ஏழை சேர்ந்தால் பிரிட்டன் நிலைமை என்னாகுமென்றும், உலகில் சமதர்மக் கிளர்ச்சி வீறுகொண்டு நிற்கிறதென்றும் இரவு பகல் எண்ணி எண்ணிக் கலாம் விளைக்கத் துணிவு கொண்டார்கள்.

பிரபுக்கள் எவ்வழியில் கலாம் விளைக்க வல்லார்கள்! அவர்கள் நேர்முகமாக எதையுஞ் செய்யமாட்டார்கள். அவர்கள் திரை மறைவு வேலையில் பேர்பெற்றவர்கள்; திரை மறைவிலிருந்தே பொறிகளைத் தூண்டுவார்கள். பாவைகள் அவர்கள் வழி ஆடத் தொடங்கும். அப்பொறியற்ற பாவைகளின் வாயிலாக அவர்கள் தங்

கள் கருத்தை நிறைவேற்றிக் கொள்வார்கள். இஃது அவர்களது தொன்று தொட்ட வழக்கம்.

பிரபுக்கள் ஆட்டும் பாவைகள் எவை? பாதிரிக் கூட்டங்கள் என்று சொல்ல வேண்டுவதில்லை. பிரபுக் கள் நலத்துக்கென்றே பாதிரிகள் வாழ்கிறார்கள். சம யம் நேரும்போது "மதம்" என்னும் போர்வையால் பாதிரிகள் பிரபுக்கள் கட்சிக்குத் துணை போவார்கள். வழக்கப்படி பிரபுக்கள், பாதிரிகளைக் கொண்டே கலாம் விளைக்கப் புகுந்தார்கள். பிரபுக்கள் நெஞ்சில் இருள் சூழ்ந்தது; கருமை கொண்டல் கொண்டலாக எழுந்தது; சூழ்ச்சிகள் செறிந்தன. சதியாலோசனைக்கென்று ஒரு கூட்டம் திரண்டது.

## வெடி குண்டு

லார்ட்ஸ் சபையில் ஒரு முடுக்கில் சில பிரபுக்களும் சில பிஷப்புகளுங் கூடினார்கள்; ஆழ்ந்து ஆழ்ந்து நிலை மையை ஆய்ந்தார்கள். சூழ்ச்சிக ளெல்லாம் ஒன்றுபட் டன. அவை, " திருமதி ஸிம்ஸன் இருமுறை மண முடித்தவர். இருகொழுநன்மாரும் உயிருடன் இருக் கின்றார். அத்தகைய ஒருவரை எட்வர்ட் மணஞ்செய்ய உறுதி செய்தால், மணவினையில் பாதிரிமார் கலந்து கொள்ளுதல் கூடாது. முடி சூட்டுதற்குக் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பும் மறுப்புரை வழங்குதல்வேண்டும்" என் னும் பலவித நச்சுக் கருவிகளைக்கொண்ட வெடிகுண்டா யின. அக்குண்டை எறியுமாறு பிராட்போர்டு பிஷப் கேட்டுக்கொள்ளப்பட்டார். அவரும் உடன்பட்டார்.

உடன்பட்டவாறே முடுக்கில் செப்பஞ் செய்யப் பெற்ற வெடிகுண்டை, பிராட்போர்டு பிஷப் ஓரிடத்

தில் ஓங்கி எறிந்தார். ஒரே வெடி ! பிரிட்டன் அதிர்ந்தது ; பார்லிமெண்ட் நடுங்கியது ; மந்திரிசபை கலங்கியது. எங்கணும் புகை மேகமெனச் சூழ்ந்தது; கமழ்ந்தது. கருவிகள் மின்னி மின்னி இடித்து இடித்து நஞ்சைப் பொழிந்தன. நஞ்சு எரிந்தது ; எழுநாவிட்டு எரிந்தது. எரி, பத்திரிகை உலகைப் பற்றியது. பத்திரிகை உலகைப் பற்றிய எரி எளிதில் தணியுமோ?

பத்திரிகைகள் மனம் போனவாறு எழுதத் தொடங்கின ; சாதக பாதகக் கருத்துக்கள் வெளிவரலாயின. அமெரிக்கப் பெண்மணியை ஆங்கில மன்னர் மணம் புரிந்து கொள்ள ஆங்கிலேயர் விரும்பவில்லையென்றும், இழிவுற்ற பெண்களை இன்னின்ன ஆங்கில மன்னர் மணம் புரிந்தனரென்றும் அமெரிக்கப் பத்திரிகைகள் தூற்றத் துணிந்தன. ஆங்கிலப் பத்திரிகைகள் மோனத்தை விடுத்துத் தக்க விடை பகர்ந்துகொண்டே வந்தன. இருநாட்டுப் பத்திரிகைகளும் பத்திரிகையுலகையே கலக்கிவிட்டன. எங்கணும் எட்வர்ட் - ஸிம்ஸன் பேச்சாயது. எட்வர்ட்-ஸிம்ஸன் நிலவாத இடமேயில்லை.

## அமைச்சர் தலையீடு

“ பிரிட்டனுக்கு என்ன நேருமோ ! சாம்ராஜ்யத்துக்கு என்ன நேருமோ ! குழப்பமற்ற பிரிட்டனும் குழப்பங்காணல் நேர்ந்ததே!” என்று பிரிட்டிஷ் மக்கள் ஏக்குற்றார்கள். அஞ்சா நெஞ்சுடைய ஆங்கிலமாதின் - அகிலத்திலும் ஆட்சிபுரியும் ஆங்கிலமாதின் - பொறிபுலன்கள் கலங்கின ; அவள் மெய்ம்மறந்தாள் ; விழித்

தாள் ; சூலைநோய் அவளை முடுக்கிற்று ; சுடரோடு தோடக்கி முடுக்கிற்று. 'மருத்துவர்' - முதல் அமைச்சர் - திரு. பால்டுவின் புறப்பட்டார் !

இங்கிலையில் திருமதி ஸிம்ஸன் தாம் இங்கிலாந்தி லிருத்தலாகாதென்றும், மன்னர் விரும்புமாறு செய் வது ஆக என்றும் எண்ணி, இங்கிலாந்தை விடுத்துக் கடல்கடந்து, பிரான்ஸிலுள்ள ஒரு சிற்றூருக்கேகினர். அம்மையார் காற்றெனப் பறந்தாரோ - காரெனப் பறந்தாரோ-ஆண்டவனே அறிவன். அழகிய அமெரிக்க வானம்பாடி இங்கிலாந்தினின்றும் எப்படியோ பறந்து விட்டது !

எட்டாம் எட்வர்டோ மன்னர் ! சாம்ராஜ்யத் தலைவர் ! நிகழ்ச்சி அவரை யொட்டியது. இங்கிலாந் தின் ஆட்சி கோனாட்சியன்று. அது குடிக்கோனாட்சி. பொறுப்பை வகிப்பது மந்திரிசபை. திரு பால்டுவின் மந்திரிசபையைக் கூட்டினர் ; நிலைமையைக் கூர்ந்து கூர்ந்து ஆய்ந்தார் ; ஆய்ந்தபின் அரசமாளிகை நோக்கி னர்.

மன்னர் பெருமான் முகமலர்ச்சியுடன் வீற்றிருந் தார். அவரை முதலமைச்சர் கண்டார். இருவருங் கலந்து பேசத் தொடங்கினர். பையப்பையத் திரு. பால்டுவின் உலகில் கொந்தளிப்பை விளைத்துக்கொண் டுள்ள ஒன்றைப்பற்றி உரையாடலானார். உரையாடல் விட்டுந் தொட்டும் ஏறக்குறைய ஒரு வாரம் நடைபெற் றது. இடையிடை மந்திரிசபை பன்முறை கூட்டப் பட்டது. இரண்டொருமுறை பார்லிமெண்டுங் கூட்டப் பட்டது.

சுழற்சி எழுந்தது ; ஓரிடத்திலா எழுந்தது! எங்கணும் எழுந்தது ! அரசகுடும்பம் சுழன்றது ; மந்திரிசபை சுழன்றது ; பார்லிமெண்டு சுழன்றது ; பிரிட்டன் சுழன்றது ; சாம்ராஜ்யம் சுழன்றது ; மண்ணுஞ் சுழன்றது; விண்ணுஞ் சுழன்றது ; எல்லாஞ் சுழன்றன. எது சுழன்றும்—எல்லாஞ் சுழன்றும்—எட்வர்ட் நெஞ்சம் சுழலவில்லை.

அன்னையார் என்னென்னவோ சொல்லி யிருப்பார்; மற்ற அரச குடும்பத்தினர் என்னென்னவோ சொல்லி யிருப்பார்; பால்டுவின் எவ்வளவோ சொல்லி யிருப்பார்; பிறரும் பல பல சொல்லியிருப்பார். எவர் சொல்லும் எட்வர்ட் செவியில் ஏறவில்லை. அவர், "ஆரா ரெனக் கென்ன போதித்தும் என்ன என்அறிவினை மயக்க வசமோ" என்று, உறுதியில் நின்றார். "பெண்ணணங்குக்கு உரைத்த உறுதிமொழியினின்றும் யான் பிறழேன் ; பிறழேன்" என்னும் பதிலே எட்வர்டினிட மிருந்து பிறந்துகொண்டிருந்தது.

திரு. பால்டுவினும் எட்வர்டும் பேசிய பேச்சுக்களில் சில வெளிவந்தன. அவைகளுள் ஒரு பகுதி உன்னற்பாலது. திருமதி ஸிம்ஸனை மணஞ்செய்யாது வைப்பாட்டியாக வைத்துக் கொள்ளுமாறு அமைச்சர் அரசருக்கு அறிவுறுத்தினராம். நல்ல அமைச்சர் ! அதற்கு அரசர்,

"புலைய னும்விரும் பாதஇப் புன்புலால் யாக்கை
நிலையெ னுமருண் டயிரினு நெடிதுறச் சிறந்தே
தலைமை சேர்தரு சத்தியம் பிறழ்வது தரியேம்
கலையு ணர்ந்தநீ எமக்கிது கழறுவ தழகோ."

என்னும் பாட்டுக்கு இலக்கியமாகி நின்று, "அவ்விழி

செயலுக்கு யான் உடன்படேன்" என்று கூறினாராம். அரசர்பாலுள்ள ஒழுக்கத்தின் விழுப்பத்தைப் பாருங்கள். "ஒழுக்கம் விழுப்பந்தரலால் ஒழுக்கம்—உயிரினும் ஓம்பப் படும்" என்பது திருவள்ளுவர் வாக்கு.

## எளிமையில் நாட்டம்

எட்டாம் எட்வர்டின் தம்பிமார் மணஞ்செய்து வாழ்வு நடாத்துகின்றார். எட்வர்டோ மணமின்றியே காலங்கழித்து வந்தார். நண்பர் சிலர் அவரை நோக்கி, மணஞ் செய்யாதிருப்பதற்குக் காரணங் கேட்பராம். அதற்கு எட்வர்ட், "எனக்குரிய பெண் இருக்கிறாளா?" என்று சிலவேளை பதிலிறுப்பாராம்; சிலவேளை, " எனக்கு அரசகுமாரிகளும் லார்ட்ஸ் வீட்டுப் பெண்களும் பிடிக்கவில்லை. எளிய வாழ்க்கை நடாத்தும் இனிய பெண் தேவை" என்று சொல்வாராம்.

எட்வர்ட் யார் ? மன்னர் வழித்தோன்றல் ; மன்னரால் மன்னராக வளர்க்கப்பட்டவர். அவர்மனம் எங்கே ஈடுபட்டுக் கிடக்கிறது ! பிறவிக்கூறுகள் பலவிதம்.

எட்வர்ட் ஒருத்தியுடன் வாழவே விரும்பினார். "மனைவி ஒருத்தி ! அவளுடன் கூத்தி இன்னொருத்தியா ! கொடுமை ! கொடுமை !" என்று எட்வர்ட் செவிகளைப் பொத்திக் கொண்டாராம். திரு. பால்டுவின் விழித்தார்.

எட்வர்ட் மன்னர் தம் பேச்சிடை ஒன்று கூறினாரென்று பத்திரிகை யுலகம் தெரிவித்தது. அதைத் திரு. பால்டுவின் பார்லிமெண்டுக்கோ சாம்ராஜ்ய மந்திரி

மாருக்கோ தெரிவிக்கவில்லையாம்; தெரிவித்திருந்தால் நிலைமை வேறு விதமாக முடிந்திருக்கும். பத்திரிகைச் செய்தி உண்மையானல் திரு. பால்டுவின் பெருந் தவறேசெய்துவிட்டார் என்று கருதுதற்கு இடனுண்டு. நியாயத் தீர்ப்பு நாளில் திரு. பால்டுவின் என்ன சொல் வரோ? என்ன செய்வரோ?

எட்வர்ட், தமக்கும் திருமதி ஸிம்ஸனுக்கும் கான் முளை தோன்றினல் அதற்கு அரசுரிமை நல்கப்பட வேண்டுவதில்லையென்று தாம் உறுதி கூறுவதாகச் சொற்றனராம். இப்பொன்னுரையைத் திரு. பால்டு வின் வெளியிட்டிருப்பின், நிலைமை ஒழுங்குபட்டிருக்கு மன்றோ? திரு. பால்டுவின் மனத்திலுள்ள மூலகார ணம் வேறு. திருமதி ஸிம்ஸன் நிகழ்ச்சி ஒரு வாய்ப் பாகவே கொள்ளப்பட்டது. மூலகாரணம் என்ன? மன்னர், தொழிலாளர் சார்பில் அன்பு காட்டுவதே யாகும்.

## ஜனநாயகச் சிறுமை

மற்றுமொன்று ஈண்டுக் குறிக்க விரும்புகிறேன். அது பார்லிமெண்ட் நிகழ்ச்சி. எட்வர்ட் - ஸிம்ஸன் காதல் காரணமாகச் சிலமுறை பார்லிமெண்ட்கூட்டப் பட்டது. ஒரு கூட்டத்திடை கர்னல் வெட்ஜ்வுட் ஒரு தீர்மானங்கொணர்ந்து, இரண்டொரு மொழி பகர்ந்தார். அம்மொழி ஈண்டுக் கருதற்பாலதே.

"எட்டாம் எட்வர்டே நம் மன்னர். ஐந்தாம் ஜார்ஜ் இறந்ததும் எட்வர்டே நம் மன்னரானுர். திருமணம் மன்னர் விருப்பத்தை யொட்டி நிகழ்வது. அதைப்பற்றி

நாம் ஏன் பேசுதல்வேண்டும்? முடி சூட்டல் என்பது தொன்றுதொட்டு வரூஉம் ஒரு சிறு சம்பிரதாயம். அதற்கும் மன்னர் பீடத்துக்கும் என்ன தொடர்பு?

என்று வெட்ஜ்வுட் மொழிந்தார். அதற்குச் செவ்வனிறை இறுக்கப்பெறவில்லை.

இப்பொழுதுள்ள பார்லிமெண்டில் கர்னல் வெட்ஜ்வுட்டை ஆதரிப்போர் தொகை மிகச் சிறியது. அதன்கண் கன்ஸர்வெடிவ் கட்சியே ஆக்கம் பெற்றிருக்கிறது. அக்கட்சிச்சார்பில் மந்திரிசபை அமைக்கப்பட்டிருக்கிறது. 'கன்ஸர்வெட்டிவ்கள்' முதலாளிகளாகவும் முதலாளிகளை ஆதரிப்பவர்களாகவுமிருப்பவர்கள். அவர்கள் எப்படிப் பிரபுக்களுக்கு மாறுபட்டு நடப்பார்கள்? பார்லிமெண்டின் பெரும்பான்மை அத்தகையவர்களிடத்தில் சிக்கிக்கொண்டிருக்கிறது.

ஜனநாயகம் என்பது பெரும்பான்மையைத் தழுவி நிலவும் ஒருமுறை. நல்லதோ-கெட்டதோ, நீதியோ-அநீதியோ பெரும்பான்மை வாக்கால் நிறைவேறப்பெறுவதே ஜனநாயகத்தில் ஏற்றுக்கொள்ளப்படும். ஜனநாயகத்தில் சில சமயங்களில் அறிவுத் தெய்வம் இடம்பெறாது நெருக்குண்டு சிறுமை யுறுவதுண்டு. ஜனநாயகத்தில் மூடரோ பிடிவாதக்காரரோ தொகையில்மட்டும் பலராயிருந்துகொண்டு அறிஞரையும் அறவோரையும் வீழ்த்தல்கூடும். அறிவற்ற பெரும்பான்மையால் தீங்கே விளையும். தற்கால ஜனநாயகத்தில் அறிவும் அறமும் குன்றிவரல் கண்கூடு.

## மன்னர் பெருந்தகைமை

முதலமைச்சர் திரு. பால்டுவின் மண்ணிலுருண்டார்; வானிற் பறந்தார்; என்னென்னவோ செய்தார்; கடைசியில் பிரிட்டன் மந்திரி சபையும், சாம்ராஜ்ய மந்திரிமாரும் அரசர் விருப்பத்துக்கு ஆதரவு நல்கவில்லை என்று அறிக்கை செய்தார். பார்லிமெண்டின் பெரும்பான்மை ஆதரவு முதலமைச்சர்க்குண்டு.

பார்லிமெண்ட் பொது மக்களால் தெரிந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளால் அமையும் ஒன்று. பொது மக்கள் கருத்தோ மன்னர் விருப்பத்துக்கு அரண் செய்தே நின்றது. அதைத் தெரிந்து கொள்ள மன்னர் பார்லிமெண்டைக் கலைத்துப் புதுத் தேர்தலுக்குக் கட்டளை பிறப்பித்தல் வேண்டும். எட்வர்ட் மன்னர் அத்துறையிலிறங்கிக் கடனாற்றியிருந்தால், பால்டுவின் மந்திரிசபை கவிழ்ந்தேயிருக்கும். அதனால் என்ன விளைந்திருக்கும்? பிரிட்டன் இருபிளவாகியிருக்கும்; சாம்ராஜ்ய தேசங்களுள்ளும் பிளவு நேர்ந்திருக்கும். பிளவு, புரட்சி வரை சென்றிருக்கும். அப்புரட்சிக்குக் கால்கோள் விழா நிகழ்த்த மன்னர் விரும்பினரில்லை. அரசகுடும்பத்தை அலைக்க அவர் மனம் எழவில்லை. நற்குடியிற் பிறந்த பெரியோர்கள், தங்கள் நலன் கருதி, அமைதி குலைக்குந் திருவிளையாடல்புரியத் தலைப்படமாட்டார்கள். 'அரசர் கட்சி என்றொன்றுண்டாக்க யான் விரும்பவில்லை' என்று எட்வர்ட் சொற்றது ஈண்டு ஊன்றிக் கருதற்பாலது. மன்னர் மிகப் பெருந்தகைமையுடன் நடந்தார் என்றே கூறலாம். அவர் மனங் கொண்டால்

6

பிரிட்டனை அலங்கோலஞ் செய்திருக்கலாம். அவர் நெஞ்சம் அத்துறையில் புகவேயில்லை.

"தீமையை எதிர்த்து நில்லாதே" என்னுங் கிறிஸ்து பெருமான் திருமொழி எட்வர்டை ஆட் கொண்டது. எட்வர்ட், தங் கருத்தை நிறைவேற்றிக் கொள்ளக் கலகத்துக்கோ குழப்பத்துக்கோ புரட் சிக்கோ தேசத்தையும் சாம்ராஜ்யத்தையும் இரையாக்க மனங்கொண்டாரில்லை. துராக்கிரகத்தில் அவர் தம் நெஞ் சம் நுழையவில்லை. அவர் "நடப்பது நடக்க" என் றிருந்தார்.

" அன்றே யென்ற னாவியும்
உடலு முடைமை யெல்லாமுங்
குன்றே யனையா யென்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்க ணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே "

—திருவாசகம்

# VIII துறவு

திரு. பால்டுவின் கடைசியாக மன்னரிடம் போந்து நிலைமையை நன்கு விளக்கிப் பதில் விரும்பி நின்ருர். "யான் காதலிக்கும் பெண்மணியை மணஞ் செய்து கொள்ள முடி தடையாக நின்ருல் யான் முடியையே துறப்பேன்" என்று மன்னர் கூறினர். முதலமைச்சர் மன்னரைப் பார்த்து, "விரும்புமாறு செய்க" என்ருர்.

எட்வர்ட் உடனே துறவுக்குச் சித்தமானுர்; ஆகி அன்பு கனிந்த ஓர் அறிக்கை விடுத்தார்.

## அறிக்கையின் சாரம் :

"ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்தேன்; அதில் மூழ்கினேன்; மூழ்கி எழுந்தேன்; எழுந்த பின்னரே என் தந்தையார்க்குப் பின்னை யான் ஏற்ற அரியாசனத்தைத் துறக்க உறுதி கொண்டேன். அத்திண்ணிய உறுதியை அறிக்கை செய்கிறேன். யான் கொண்ட உறுதியையும், அதற்கு அடிப்படையாயுள்ள காரணங்களையும் எனது குடிமக்கள் சீர் தூக்கிப் பார்ப்பார்களாக; பார்த்தால் எனது செயலில் நியாயம் திகழ்வதை உணர்வார்கள் என்று நம்புகிறேன்.

எனது உள்ளத்தில் கிளர்ந்துள்ள உணர்ச்சியை வெளியிடுதற்கு யான் விரைகின்றேனில்லை. பொதுமைக் கடனாற்றவே யான் விரைகிறேன். அரச பாரம் மிகப் பொறுப்பு வாய்ந்தது. அவ்வரும்பொறுப்பை ஏற்றுக் கடனாற்றத் தற்போதைய நிலைமை இடந்தரவில்லை.

என்மீது சுமத்தப்பட்டுள்ள பொறுப்பை யான் உணராமலில்லை. உணர்ந்தே, பொறுப்புக்கேற்றவாறு இனித் திறம்படவும், எனது உள்ளம் நிறைவுபடவும் கடனாற்றல் இயலாது என்ற முடிவுக்கு வந்தேன். அதனால், முடி துறக்கவே உறுதிகொண்டேன். அதற்குரிய உடன்படிக்கை வருமாறு :—

'கிரேட் பிரிட்டனுக்கும், அயர்லாந்துக்கும், மற்ற பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளுக்கும் மன்னனும், இந்தியாவின் மன்னர் மன்னனுமாகிய எட்டாம் எட்வர்ட் என்னும் யான் அரியாசனத்தைத் துறக்கக் கொண்ட திண்ணிய உறுதியை அறுதியிடுகிறேன். என்வழித் தோன்றல்கட்கும் அவ்வரியாசன உரிமையில்லை என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். உடன்படிக்கை உடனே ஏற்றுக்கொள்ளப்படல் வேண்டுமென்பது எனது விருப்பம். 1936-ம் ஆண்டு, டிசம்பர் 10-ம் நாளாகிய இன்று, சான்றுகள் முன்னிலையில் யான் எனது கைச்சாத்தைப் பொறிக்கிறேன்.'

(ஒப்பம்) எட்வர்ட், ஆர். ஐ.

"யான் நிறுவிய இவ்வுடன்படிக்கைக்குச் சான்றவர் என்னுடன் பிறந்த மூவர். அவர், யார்க் கோமகனாரும், குளோஸ்டர் கோமகனாரும், கென்ட் கோமகனாருமாவர்.

என் பொருட்டுப் பலதிற வேண்டுதல்கள் வந்தன. அவைகளில் செழுமியுள்ள அன்பைப் பாராட்டுகிறேன். அவைக

ளைக் கூர்ந்துகூர்ந்து உன்னினேன். மனம் மாறுதல் அடைய வில்லை. யான் கொண்ட உறுதியிலேயே என் மனம் நிலைத்துவிட்டது. இன்னுங் காலந் தாழ்ப்பது எனது அன் பார்ந்த குடிமக்களின் நலத்துக்குக் கேடு விளைப்பதாகும். அவர்கள் நலங்கருதி யான் வேல்ஸ் இளங்கோவாகவும், மன்னனாகவும் தொண்டாற்றி யிருக்கிறேன். அவர்கள் மேலும் மேலும் நலம்பெற வேண்டுமென்பது எனது இடை யறாத வேட்கை.

அரசும் சாம்ராஜ்யமும் நீடுவாழவும், குடிமக்கள் இன்புற வும் இம்முடிவுக்கு வருதலே நல்லது என்று கருதலானேன். இக்கருத்துடன் விடை பெற்றுக்கொள்கிறேன். யான் அரி யாசனம் இவர்தற்கு முன்னரும் பின்னரும் குடிமக்கள் என் பால் செலுத்திவந்த அன்பை மறவேன்; அதற்கு என்றும் நன்றி யறிதலுடையேன். அதே அன்பை என் பின்னவர்க் கும் குடிமக்கள் செலுத்துவார்கள் என்னும் நம்பிக்கை எனக்கு உண்டு.

யான் நிறைவேற்றியுள்ள உடன்படிக்கை உடனே ஏற்றுக் கொள்ளப்படுதல் வேண்டும். எனக்குப் பின்னர் அரியாச னத்தில் அமரும் உரிமையுடையார் என் தம்பியார் யார்க் கோமகனாரேயாவர். அவர் அரியாசனம் அமர்தற் குரிய காரியங்கள் விரைவில் நடத்தப்பெறல் வேண்டும்."

(ஒப்பம்) **எட்வர்ட், ஆர். ஐ.**

அறிக்கை பார்லிமெண்டில் வாசிக்கப்பட்டது. முதலமைச்சர் திரு. பால்டுவின் நிகழ்ச்சிகளை யெல்லாம் விளக்கி நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன்கண் இருவரை மணந்த ஒருவர் திருமதி ஸிம்ஸன் என்பதும், இரு கணவரும் உயிருடனிருக்கிறார் என் பதும் சிறப்பாக விளக்கப்பட்டன. மற்றுஞ் சிலரும் பேசினர், கர்னல் வெட்ஜ்வுட் தமது தீர்மானத்தைத்

திரும்பப் பெற்றுக்கொண்டார். சம்பிரதாய முறைக ளெல்லாம் நடைபெற்றன. யார்க் கோமகனார் மன்ன ரானார். அவர் மன்னரானதும் தம் தமயனாரை வின்ஸர் கோமகனாராக்கினார்.

எட்வர்ட் அரசு துறந்ததும், சாம்ராஜ்ய மக்க ளுடன் தேனினுமினிய தீம்மொழியால் பேசினார்.

## பேச்சின் சுருக்கம் :

"மன்னன், மன்னர் மன்னன் என்ற தொடர்பைச் சிறிது நேரத்துக்கு முன்னரே யான் அறுத்துக் கொண்டேன்; இப்பொழுது கோமகன் என்னும் முறையில் பேசுகிறேன். என் தம்பியார் யார்க் கோமகனாரால் அரசு பாரம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எனது வணக்கத்தை முதலாவது அவர்க்குச் செலுத்துகிறேன்; இதை என் மனமார நிகழ்த்து கிறேன்.

யான் அரசு துறக்க நேர்ந்த காரணம் உங்கட்குத் தெரி யும். அரசு துறந்தமையால், கடந்த இருபத்தைந்தாண்டாக வேல்ஸ் இளங்கோவாகவும் மன்னனாகவும் நின்று, தொண்டு செய்தற்கு நிலைக்களனாக இருந்த தேசத்தையும் சாம்ராஜ் யத்தையும் யான் ஒருபோதும் மறந்துவிடேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மன்னர் பொறுப்புச் சீரியது; பெரியது. பொறுப்புக் குரிய தொண்டாற்றல் வேண்டும். யான் காதலித்துள்ள பெண்ணணங்கின் கூட்டுறவின்றி அத்தொண்டை என் விருப்பப்படி ஆற்ற இயலாதென்று நன்கு தெளிந்தேன்; தெளிந்தே அரசு துறக்கத் துணிந்தேன்.

இச்செயலுக்கு யானே பொறுப்பாளி. விடயம் என்னைப் பற்றியது. அதை யானே முடிவு செய்தல் வேண்டும். யான் கண்ட முடிவல்லாத பிறிதொன்றைக் காணுமாறு

கொழுந்தையர் ஒருவர் என்னை வலியுறுத்தினர். அதனால் என் மனம் மாறுதல் அடையவில்லை.

இம்முடிவுக்கு யான் ஏன் வந்தேன்? இதற்குரிய காரணம் ஒன்றே. அஃது, எனது செயலால் எல்லார்க்கும் நலன் விளைதல் வேண்டும் என்பதே.

இம்முடிவுக்கு யான் எளிதில் வரலானேன்; ஏதனால்? இத்தேசத்தின் பொதுக் காரியங்களில் ஈடுபட்டுப் பெரிய அநுபவம் பெற்றவரும், நற்குணம் வாய்ந்தவரும், சாம்ராஜ்ய நிகழ்ச்சிகளில் எவ்விதச் சிக்கலோ இடரோ நேராதவாறு எனது பதவியை ஏற்கும் உரிமையும் வல்லமையும் உடையவருமாகிய தம்பியார் இருத்தலினால் யான் எளிதில் நன்முடிவுக்கு வரலானேன். அவருக்கு ஒரு பெரும் பேறு உண்டு. அஃது உங்களில் பெரும்பான்மையோர்க்கு வாய்த்தது; எனக்கு வாய்க்காதது. அஃதென்னை? அது, மனைவி மக்களோடு கூடிய இன்ப வாழ்வுப் பேறு.

சோதனை நாட்களிலும் என் அருமை அன்னையாரும், மற்ற அரச குடும்பத்தவரும் என் உள்ளம் மகிழ்வுறும் முறையிலேயே நடந்துகொண்டனர். அமைச்சரும்,சிறப்பாக முதலமைச்சரும் பரிவுடன் என்னொடு உறவாடியே வந்தனர். எனக்கும் அவர்கட்கும், எனக்கும் பார்லிமெண்டுக்கும் ஆட்சி முறையில் எவ்விதக் கருத்து வேற்றுமையும் நிகழ்ந்ததில்லை. வரம்பு முறையினின்றும் யான் பிறழாது நடக்குமாறு என்னைப் பண்படுத்திய பெருமை என் தந்தையாருடையது. யான் இளங்கோவான நாள் தொட்டு - யான் அரியாசனம் அமர்ந்த நாள் வரை - சாம்ராஜ்யத்தில் எப்பகுதியிலும் யான் வதிந்த போதும், சென்றபோதும் குடிமக்கள் எல்லாரும் என்பால் அன்பு பூண்டே ஒழுகினர். எல்லார்க்கும் எனது நன்றியைச் செலுத்துகிறேன்.

யான் பொதுக் காரியங்களினின்றும் விலகுகிறேன்; என் சுமையை இறக்கிவிட்டேன். மீண்டும் காடு நோக்கச்

சின்னாகும். பிரிட்டிஷ் இனத்தினதும், சாம்ராஜ்யத்தினதும் நலனை நாடிய வண்ணமா யிருப்பேன். மன்னருக்கு எனது ஊழியம் எப்பொழுதேனும் வேண்டப் படுமானால், அதைச் செய்ய யான் தவறேன்.

நாம் அனைவரும் இப்பொழுது ஒரு புதிய மன்னரைப் பெற்றிருக்கிறோம். அவர்க்கும், அவர்தம் குடிமக்களாகிய உங்கட்கும், மகிழ்வும் நலனும் உண்டாக என்று மனமார வாழ்த்துகிறேன். இறைவன் உங்கட்கு நலம் புரிவானாக; மன்னரைக் காப்பானாக"

என்று பேசி விடைபெற்று, உடனே எட்வர்ட் ஐரோப்பா கண்டத்துக்குப் புறப்பட்டார். அரச குடும்பம் அலமந்தது. பிரிட்டன் உருகலாயிற்று. சாம்ராஜ்யம் கண்ணீர் உகுத்தது. ஒரு பெரும் சாம்ராஜ்ய மன்னராயிருந்த ஒருவர் கோமகனாகி வியென்னாவுக் கருகேயுள்ள ஒரு பதியைச் சேர்ந்தார்.

# IX சோதனை



எட்வர்ட் துறவு போன்ற நிகழ்ச்சிகள் ஒவ்வொரு போதுநேர்கின்றன. அந்நிகழ்ச்சிகள்நேர்வானேன்? உலகியல் காரணங்கள் பலபடக் கூறலாம். அக்காரணங்கள் ஒருபால் கிடக்க. அந்நிகழ்ச்சிகட்கும், இயற்கை-இறையின்நோக்குக்கும் ஏதாயினுந் தொடர்பிருக்குமா என்று சிந்தித்தல்வேண்டும். அத்தகை நிகழ்ச்சிகள் ஒவ்வொரு போது நேர்தல் வேண்டுமென்பது இயற்கை-இறையின் திருவுள்ளமோ என்னவோ தெரியவில்லை. அந்நிகழ்ச்சிகளால் உயிர்களின் இயல்களை மன்பதை பயின்று திருந்துதற்கு இடமுண்டாகுமென்பது இயற்கை-இறையின் நோக்கம் போலும்!

இயற்கை-இறை, உயிர்களைத் தன்னைப்போலாக்க அவைகட்குத் தனு கரண புவன போகங்களைத் தருகிறது. அவைகளைக் கொண்டு உயிர்கள் நல்வழியில் வாழ்ந்து இறை மயமாதல் வேண்டும். எல்லாம் இறையின் கருணையால் நிகழ்கின்றன என்பதை மறத்தலாகாது.

இறையருளால் உயிர்கள் தாங்கும் பிறவிகள் பல. அவைகளுள் சிறந்தது மனிதப் பிறவி. என்னை? அப்பிறவியில் பகுத்தறிவு உண்மையால் என்க. மக்கள் பகுத்தறிவுடன் வாழ்கிறார்களா இல்லையா என்னுஞ் சோதனை இறையருளால் நிகழ்வதுண்டு. அச்சோதனை ஒவ்வொருவர் வாழ்விலும் நிகழ்கிறது. அதை உணர்ந்து நடப்போர் சிலர். அச்சோதனைக் குறிப்பை உணர்ந்து

நடப்போர் பலராயின், 'உலகில் நீதிமன்றங்கள் வேண்டுவதில்லை; அரசும் வேண்டுவதில்லை' என்று கூறலாம்.

உயிர்களின் நலங் கருதியே திருவருட் சோதனை நிகழும். அதை யுணர்தற்கே மனிதப் பிறவியில் பகுத்தறிவு விளங்கும் வாய்ப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. வாய்ப்பை நல்வழியில் பயன்படுத்தல் வேண்டும். அதை நல்வழியில் பயன்படுத்துவோர் மனிதரில் மனிதராகி இன்புறுவர்; ஏனையோர் மனிதரில் விலங்காகித் துன்புறுவர்.

உலகில் கல்வி - செல்வம் - பேர் - புகழ் மட்டும் ஒருவரை மனிதரில் மனிதராக்கா. அவைகளுடன் அறவொழுக்கமும் வேண்டும். அறவொழுக்கம், பகுத்தறிவு வழி நடப்பவரிடமே அமையும். அவ்வொழுக்கம் இன்னாரிடம் அமையும், இன்னாரிடம் அமையாது என்னும் நியதியில்லை. அஃது எல்லார்க்கும் உரியது. கல்வி - செல்வம் - பேர் - புகழ் முதலிய பேறுகளுடையாரும் அறவொழுக்கத்தில் நிற்கலாம்; அவை யில்லாதாரும் அவ்வொழுக்கத்தில் நிற்கலாம். அறவொழுக்கம் பொது.

சில சமயங்களில் கல்வி - செல்வம் - பேர் - புகழ் முதலியன அறவொழுக்கத்துக்குத் தடை செய்வனவாகவும் நிற்கும். தடையைப் பகுத்தறிவால் கடந்து அறவொழுக்கத்தில் நிற்க முயல்வதே சிறப்பு.

எட்வர்ட் துறவுக்குக் காரணராக நின்றோரெல்லாரும் உலகியற் சிறப்புடையோரே யாவர். அவர்கட்குச் சோதனை நேர்ந்தது. சோதனையில் வெற்றிபெற்றவர் எத்தனைபேர்? எட்வர்ட் சோதனையில் வெற்றியே பெற்றார்.

பால்டுவின் உள்ளிட்ட மந்திரிமாரும், பிரபுக்களும், பிஷப்புக்களும், மற்றவர்களும் சோதனையில் மயக்குண்டு வீழ்ந்தார்கள். அவர்களது கல்வி - செல்வம் - பேர் - புகழ் முதலிய யாவும் பயன்படவே யில்லை.

## பால்டுவின் தோல்வி

திரு. பால்டுவின் உலகியலில் எவ்வளவோ பெரியவர்; பிரிட்டனில் முதலமைச்சர் பதவியை வகித்திருந்தவர். அதைவிடச் சிறந்த பதவி பிரிட்டனில் வேறொன்றில்லை. அவருக்குச் சோதனை நேர்ந்தது. எப்பொழுது? அநுபவம் பழுத்து முதிர்ந்த வயதில் - பெரும் பதவி இன்பத்தை நுகர்ந்த வேளையில் - சோதனை நேர்ந்தது. திரு. பால்டுவின் சோதனையில் வெற்றி பெற்றாரா? தோல்வியுற்றாரா? அந்தோ பாவம்! அவர் முழுத் தோல்வியுற்றார். அவர் வாழ்வில் வீழ்ந்தாரென்றே கூறலாம். நல்ல வாய்ப்பு வீணாயிற்று!

சோதனையின்போது திரு. பால்டுவின் முன்னே இரண்டு வழிகள் தோன்றி நின்றன. ஒன்று மனச்சான்றென்னுந் தெய்வவழி; மற்றொன்று செல்வமென்னும் பேய்வழி. திரு. பால்டுவின் அறிவு - 'பகுத்தறிவு'-எவ்வழிச் சென்றது? அவர்தம் அறிவு பேய்வழியே சென்றது. திரு. பால்டுவினுக்கு என்ன இல்லை? கல்வியில்லையா? செல்வமில்லையா? பேரில்லையா? புகழில்லையா? எல்லா மிருக்கின்றன; இருந்தும் பயன் விளைந்ததா? அவர்தம் அறிவு தெய்வ வழியிற் புகவில்லை; வேறொரு வழியிற் புகுந்தது.

திரு. பால்டுவின் பேய் வழியில் பலமுறை உழன்றவர். அவர்க்குத் தெய்வவழி தோன்றும் வாய்ப்புக்

கிடைத்தது. அவ்வாய்ப்பை அவர் பாழ்படுத்திவிட்டார்! முதிய பால்டுவின் வீழ்ந்தார். இங்கே "ஏழைத்தொழும் பனேன் எத்தனையோ காலமெல்லாம் - பாழுக்குழைத் தேன் பரம்பரனைப் பணியாதே" எனவரூஉம் மணி மொழியை நோக்குக ; "இருவே றுலகத் தியற்கை திரு வேறு - தெள்ளிய ராதல் வேறு" என்னும் பொய்யா மொழியையும் ஓர்க.

திரு. பால்டுவின் வாழ்வெல்லாம் பிரபுக்களுக் கென்றே பெரிதும் பயன்பட்டன. முதிய வயதிலாவது - சோதனை நேர்ந்தபோதாவது - அவர் மனம் அறவழி யில் நிற்க ஒருப்பட்டதா? இல்லையே! நன்மனமுடைய ஒருவரை அரியாசனத்தினின்றுந் தூரத்தவே அவர் மனம் ஒருப்பட்டது. முதிய ஒருவரையும் சாத்தான் தன் வயப்படுத்தியே நின்றான்! அவன்றன் ஆற்றல் என்னே!

திரு. பால்டுவின் இன்னுஞ் சாத்தான் பிள்ளை யாகவே வாழ்கிறார். அவர் இப்பொழுது எர்லாகி, லார்ட்ஸ் கூட்டத்திடை நின்று களியாட்டயர்கிறார். பிர புக்கள் அவர்தஞ் செயலைப் போற்றுகிறார்கள் ; புகழ் கிறார்கள். எட்வர்ட் துறவுக்குத் துணை நின்றதை முன்னிட்டுத் திரு. பால்டுவினுக்கு எவரோ ஒரு பிரபு- ஊர்பேரில்லாதவர்-இரண்டரை லட்சம் பொன் (பவுன்) தந்தாராம். அத்தொகை சாம்ராஜ்யக் கட்டுப்பாட்டை ஓம்புதற்கெனச் சேம நிதியாக வைக்கப்பட்டிருக்கிற தாம். இன்னும் பிரபுக்கள் அக்காப்புக்கென்று பெரும் பொருள் திரட்டுவார்கள். தாங்கள் விரும்பாத மன்ன

னைத் தொலைத்த ஒருவர்க்குப் பிரபுக்கள் என்னதான் செய்யமாட்டார்கள்?

திரு. பால்டுவின் இன்னும் சாத்தானுக்கு ஏவல்புரியவே முனைந்து நிற்கிறார். அவர், என்று பேய்க்கடலைக் கடந்து தெய்வக்கரை ஏறுவரோ? அவர் என்று மனந் திரும்பிக் கிறிஸ்துவ வாழ்வு பெறுவரோ? தாஞ்செய்த தவறுதல் குறித்து அவர் மனங் கசிந்து கசிந்து என்று அழுவரோ? அவ்வழுகை அவரிடம் இன்னும் எழவில்லை. அழுகை எழுந்தால் அவர் எர்லாக எண்ணுவரோ? பாவநிதிக்கென இரண்டரை லட்சம் ஏற்பரோ? அவர் மனம் இன்னும் திரும்பவில்லை. அவர் மனந் திரும்பி உய்யுமாறு ஆண்டவன் அருள்வானாக.

## பிரபுக்கள் உலகம்

எட்வர்ட் துறவுக்கு மூலகாரணம் பிரபுக்களின் சூழ்ச்சி என்பது மேலே சொல்லப்பட்டது. பிரபுக்கள் வழியே மந்திரிசபை ஆடிற்று; முதல் மந்திரியும் ஆடினார்; மற்றவரும் ஆடினர். இந்நாளில் உலகை ஆட்டி வைப்போர் பிரபுக்களேயாவர். பிரபுக்கள் பழைய அன்பு நிலையைப் பெறுவார்களாயின், உலகில் போராட்டத்துக்கு இடங் கிடைத்தலே அருமையாகும்.

பிரபுக்கள் பண்டை நாளில் தெய்வ பக்தியுடையவர்களாக இருந்தார்கள்; தங்கட்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்தார்கள். அவர்கள் தங்கள் நிலபுலங்களையும், பொன் பொருளையும், பிறவற்றையும் தங்களுரிமைச் செல்வங்களாகக் கொண்டார்களில்லை; அவைகள் இறைவ

னுடையனவென்றும், அவைகளின் பயனை மக்கள் அற வழியில் பகிர்ந்துண்பதற்குத் துணைபுரியுந் தர்மகர்த்தர்கள் தாங்களென்றும் எண்ணியே காலங்கழித்தார்கள். அந்நாளில் பிரபுக்கள் ஜீவகாருண்யமுடையவர்களாக வாழ்ந்தார்கள் என்று சுருங்கச் சொல்லலாம்.

பின்னே இயந்திர ஆட்சி தோன்றிற்று. அவ்வாட்சி பிரபுக்களை ஆசைச் சேற்றில் அழுத்தியது. தன்னலப் பேய் அவர்களை விழுங்கிற்று. பிரபுக்கள் தங்கள் நலன் கருதியே வாழலானார்கள்; தங்கள் நலத்துக்கு ஏழை மக்கள் படைக்கப்பட்டார்கள் என்று எண்ணலானார்கள். ஏழை மக்களை அடக்கியாளவேண்டி, அவர்கள் அரசுகளைத் தங்கள் வயப்படுத்தினார்கள்; பத்திரிகைகளைத் தங்கள் வயப்படுத்தினார்கள்; புரோகிதர்களையுந் தங்கள் வயப்படுத்தினார்கள். சட்டங்கள் பல அவர்கள் நலத்துக்கென்றே செய்யப்பட்டன. கோடிக் கணக்கான மக்களைக்கொண்ட ஒவ்வொரு தேசமும் ஆங்காங்குள்ள ஒரு சில பிரபுக்களின் வயப்படலாயிற்று.

பிரபுக் கூட்டத்தின் தன்னலச் செயல்களால் விளைந்ததென்னை? விளைவு, முதலாளி - தொழிலாளி போராட்டமேயாகும். மேல்நாடு, தற்போது முதலாளி-தொழிலாளி போராட்டத்துக்கு இரையாகி வருதல் கண்கூடு. மேல்நாட்டில் பொதுவுடைமை யென்றும், சர்வாதிகாரமென்றும் விலங்கியல்புகள் வீறிடுகின்றன. அந்நாட்டின் செல்வங்கள் பெரிதும் குண்டு பீரங்கிகளுக்கே செலவாகின்றன. அந்நாட்டின் போராட்டம் உலக முழுவதும் பரவிவருகிறது.

## அறவோர்

எல்லாம் வல்ல ஆண்டவன், உலகம் கொலைக்களமாதற்கு விரும்புவனே? ஒருபோதும் விரும்பான். அவன் தன் விருப்பத்தை நிறைவேற்றுதற்கு அறவோரை ஆங்காங்கே தோன்றச் செய்கிறான். அறவோர் வழி உலகம் நடைபெற்றால் உலகில் போராட்டம் ஒழியும். உலகம் - தற்கால உலகம் - அறவோர் வழி நிற்க ஒருப்படுகிறதா? அறவோரையும் தற்கால உலகம் கடிந்துவிடுகிறது.

பிரிட்டனில் ஓர் அறவோர் தோன்றினார். அவர் எவர் வழித்தோன்றினார்? அவர் ஒரு பெரும் மன்னர் வழித் தோன்றினார். அவரே எட்டாம் எட்வர்டாயிருந்தவர்; இப்பொழுது வின்ஸர் கோமகனா யிருப்பவர். அவர், முதலாளி-தொழிலாளி போராட்டத்தை அன்பு வழியில் போக்கப் போந்த பெரியார் என்பது அவர்தம் வரலாற்றால் நன்கு தெரிகிறது. எட்வர்ட், முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையில் நின்று, அவர்தம் போராட்டத்தைத் தீர்க்க முயன்றார். அவர் நீண்ட காலம் மன்னரா யிருக்கும் பேறு பெற்றிருப்பரேல், முதல் - தொழில் போராட்டத்தை நேரிய முறையில் ஒழித்திருப்பர். அவர் எத்துணை நாள் மன்னரா யிருந்தார்? ஏறக்குறைய ஓராண்டே. முளையிலேயே அவர்தம் முயற்சி களையப்பட்டது.

சோக்ரதரை நஞ்சூட்டிக் கொன்ற உலகம் - கிறிஸ்துவைச் சிலுவையி லறைந்த உலகம் - மகம்மதுவைத் துன்புறுத்திய உலகம் - காந்தியடிகளைச் சிறைப்படுத்

திய உலகம் - எட்வர்டை எளிதில் விடுமோ? பொல்லாத உலகம் அவரை அரசு துறக்கச் செய்தது. முதலாளி - தொழிலாளி போராட்டத்தைப் பிரிட்டன் வாயிலாக நீக்கும் வாய்ப்பு ஆண்டவனால் வழங்கப்பட்டது. அவ்வாய்ப்பைப் பிரபுக்கள் உலகம் நன்முறையில் பயன்படுத்திக் கொள்ளவில்லை.

## நிலையாமை

ஆண்டவன் திருவுள்ளக் குறிப்பு, பிரபுக்களுக்குப் புலனாதல் அரிதே. செல்வச் செருக்கு அவர்கள் கண்களை மூடியிருக்கிறது. செருக்குக்கு உலகமும், உடலும், வாழ்வும், பிறவும் நிலைபேறுகவே தோன்றும். செருக்குடையார் நெஞ்சில் நிலையாமை தோன்றுவதில்லை. மரணம் தமக்கில்லை என்பது அவர்தம் எண்ணம் போலும்!

உலகமும் உடலும் ஆண்டவன் கோடை. அக்கோடையினின்றும் அரும்புவது வாழ்வு. வாழ்வுக்குப் பொருள் தேவை. பொருள் இன்னார்க்கு வேண்டும் இன்னார்க்கு வேண்டாம் என்னுங் கட்டுப்பாடில்லை. பொருள் எல்லார்க்குமே வேண்டும். "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியுமன்றே" என்று திருக்கோவை சொல்கிறது. "பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை" என்று திருவள்ளுவர் கூறியருளினார். இம்முதுரைகளால் பொருளின் இன்றியமையாமை நன்கு விளங்குகிறது. அப்பொருள் அறவழியில் ஈட்டப் பெறல் வேண்டும்.

அறவழியில் பொருளீட்டி, அறவழியில் உலகில் வாழ்ந்து, அறவழியில் இன்பந் துய்த்தலே விடுதலைக்கு

வழிகோலுவதாகும். உலக வாழ்வு விடுதலைக் கென்றே நல்கப்பட்டது. அறியாமை (அவித்தை) நோய் போக்கும் மருந்து உலக வாழ்வேயாகும். "இறைகளோ டிசைந்த இன்பம் இன்பத்தோ டிசைந்த வாழ்வு" என்பது சுந்தரர் திருவாக்கு.

உலக வாழ்வு, கட்டடம் எழும்புதற்குத் துணை புரியும் சாரம் போன்றது; இக்கரையினின்றும் அக்கரை சேர்தற்கு உதவி புரியும் தோணி போன்றது. அத்தகை வாழ்வைத் துறத்தலும் அறியாமை; அதுவே நிலைபேறு என்று அதன்கண் அழுந்தலும் அறியாமை. பிறவிக் கடலைக் கடந்து இறைவனடி என்னுங் கரையேறுதற்கு உலக வாழ்வை ஒரு பெருங் கருவியாக - ஆண்டவன் அருட்கொடையாக - கொண்டு ஒழுகுவதே சிறப்பு.

உலக வாழ்வே நிலைபேறு என்றும், அதற்கு வேறாக மற்றொரு வாழ்வு இல்லை என்றும் வாழ்வோர் பாவச் செயல்களுக்கு அஞ்சார். அவர் தமது நலனுக் கென்று இரக்கமின்றிப் பிறரைத் துன்புறுத்துவர். அவர்தம் அறிவில் புகவேண்டுவது நிலையாமை. அவர் பால் நிலையாமை உணர்வு பெருகப் பெருகப் பாவச் செயலும் அருகிக் கொண்டே போகும். அது பற்றியே அவர் பொருட்டு நிலையாமையைப் பல வழியிலும் ஆன்றோர் அறிவுறுத்தினர்.

"ஊருஞ் சதமல்ல உற்றார் சதமல்ல உற்றுப் பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டிர் சதமல்ல பிள்ளைகளுஞ்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேயத்திலே
யாருஞ் சதமல்ல நின்றாள் சதங்கச்சி யேகம்பனே"

"முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு பின்னுமிந்தப்

படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற்பொன்னி னம்பலவர்
அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென் றேயறி வாரில்லையே"

"தெய்வச் சிதம்பர தேவாவுன் சித்தந் திரும்பி விட்டால்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியுமெங்கே
மெய்வைத்த செல்வமெங் கேமண்ட லீகர்தம் மேடையெங்கே
கைவைத்த நாடக சாலையெங் கேயிது கண்மயக்கே"

—பட்டினத்தார்

பிரபுக்களுக்கு நிலையாமை உணர்வு எழுமோ? எழுந்தால் அவர்கள் மனந் திரும்பி ஏழைகளிடத்து அன்புடையவர்களாகவே வாழ்வார்கள். பிரிட்டன் பிரபுக்கள், ஓர் ஏழைப் பெண்ணைத் தங்கள் மன்னர் மணம் புரிதலாகாது என்று கிளர்ச்சி செய்தார்கள்; அவரை அரியாசனத்தினின்றுந் துரத்தினார்கள். மன்னர், பிரபுக்களுக்கு நல்லறிவு கொளுத்த வேண்டிச் சாம்ராஜ்யத் தலைமையையே துறந்து காட்டினார். எட்வர்ட் துறவு பிரிட்டன் பிரபுக்களுக்கு ஒரு நல்ல பாடம். அஃது ஆண்டவன் அருளால் நிகழ்ந்தது. அருள் நிகழ்ச்சி பிரபுக்களுக்குப் புலனாகுமா? பிரபுக்கள் கண்ணிருந்துங் காணாதவர் - செவியிருந்துங் கேளாதவர் - வாயிருந்தும் பேசாதவர் - அல்லரோ?

எட்வர்ட் துறவு நிகழ்ச்சி இன்றுடன் மறைவதன்று; நாளையுடன் மறைவதன்று. அஃது என்றும் நிற்பது; பிரபுக்களையும் மனந்திரும்பத் தூண்டுவது; அவர்களை மனிதரில் மனிதராக்க அறிவுறுத்துவது. பிரபுக்கள் உலகம் மனந்திரும்பி உய்வதாக.

## புரோகித மாயை

இனி, பிஷப் உலகத்தின்மீது சிறிது கருத்துச் செலுத்துவோம். எட்வர்ட் துறவுக்குப் பிஷப் உலக

மும் (புரோகித உலகமும்) காரணமாக நின்றது. அவ்வுலகில் குறிப்பிடத்தக்கவர் காண்டர் பரி ஆர்ச் பிஷப், யார்க் ஆர்ச் பிஷப் முதலியோர். அவர்கள் எட்வர்ட் துறவில் கலந்து கொண்டது அநாவசியம். பிரபுக்களுக்குத் துணை போகவே பிஷப்புக்கள் எட்வர்ட் துறவில் கலந்து கொண்டார்கள்.

தற்கால பிஷப்புக்கள் எப்படி இருக்கிறார்கள்? அவர்கள் பைபில் படிக்கிறார்கள்; சுவிசேஷப் பிரசாரஞ் செய்கிறார்கள்; நித்திய ஜெபமுஞ் செய்கிறார்கள். ஆனால் அவர்களது வாழ்வில் பைபில் படிப்பும், சுவிசேஷப் பிரசாரமும், நித்திய ஜெபமும் நுழைந்து ஒன்றுவதில்லை.

கலெக்டர்களைப் போலவும், கவர்னர்களைப் போலவும் பிஷப்புக்கள் அதிகாரிகளாகவே வாழ்கிறார்கள். அன்பைப் பார்க்கிலும் அதிகாரமே அவர்களிடத்தில் விஞ்சி நிற்கிறது. பிஷப்புக்கள் கிறிஸ்துவைப் பற்றிப் பேசுகிறார்களே யன்றி, கிறிஸ்துவைப்போல் வாழ அவர்கள் விரும்புகிறார்களில்லை. அவர்கள் பிரபுக்கள் உலகில் வாழவே விரும்புகிறார்கள். அவர்கட்குக் கிறிஸ்துவின் உலகம் எங்ஙனம் புலனாகும்?

## சாத்தான் உலகம்

'எட்வர்ட் திருமணத்திலும் முடிசூட்டலிலும் நாங்கள் கலந்துகொள்ளோம்' என்று கூக்குரலிட்டவர்கள் யார்? பிஷப்புக்களல்லவோ? அவர்கள் ஏன் கூக்குரலிடல் வேண்டும்? அவர்கள் அன்புக் கிறிஸ்து உலகில் வாழ்ந்தால் கூக்குரலிட்டிருப்பார்களோ? அதி

காரச் சாத்தான் உலகம் கூக்குரலை எழுப்பிவிட்டது. சாத்தான் உலகம் சோதனைக்குரியது. அச்சோதனையைக் கடப்பவரே தெய்வப்பிள்ளைகளாவர்.

"* * * * பின்னும் பிசாசு அவரை மிகவும் உயர்ந்த மலைமேல் கொண்டுபோய் உலகத்தின் சகல ராஜ்யங்களையும் அவைகளின் மகிமையையும் அவருக்குக் காண்பித்து: நீர் சாஷ்டாங்கமாய் விழுந்து என்னைப் பணிந்து கொண்டால் இவைகளெல்லாவற்றையும் உமக்குத் தருவேன் என்று சொன்னான். அப்பொழுது இயேசு: அப்பாலே போ சாத்தானே; உன் கர்த்தராகிய கடவுளைப் பணிந்து கொண்டு அவர் ஒருவருக்கே ஆராதனை செய் என்று எழுதியிருக்கிறதே என்றார். அப்பொழுது பிசாசு அவரை விட்டுப் போனான். இதோ, தெய்வதூதர் வந்து அவருக்குப் பணிவிடை செய்தார்கள்.''

—மத்தேயு : 4 : 8-11

இங்கே சாத்தான் உலகம் எது? கிறிஸ்துவின் உலகம் எது? என்பது நன்கு விளங்குகிறது. இவ்விரண்டில் காண்டர்பரி ஆர்ச்பிஷப் உலகம் எது? அன்பர்களே! சிந்தியுங்கள். பிரபுக்கள், பிஷப்பைத் தூண்டிய போது "அப்பாலே போங்கள்" என்று கூற அவருக்கு மனம் எழுந்ததா? 'சகல ராஜ்யங்களையும் அவைகளின் மகிமையையும்' கொடுக்கவந்த சாத்தானைப் பார்த்து, இயேசுபெருமான் என்ன சொன்னார்? "அப்பாலே போ சாத்தானே" என்றன்றோ சொன்னார்? அக்கிறிஸ்துவின் அடியவர் சாத்தானுக்கு ஏவல் செய்ய ஒருப்படுவரோ?

"அகலிடமே * * * *
துகிலுடுத்துப் பொன்பூண்டு திரிவோர்

சொல்லுஞ் சொற்கேட்கக் கடவோமோ
துரிசற்றோமே"

"வாராண்ட * * * *
பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற்றோமே"

—அப்பர்

## கிறிஸ்து எவருக்காக வந்தார்?

காண்டர்பரி ஆர்ச் பிஷப்புக்கும் மற்றவருக்கும் சீற்றம் எழுப்பியது எது? எட்வர்ட் ஓர் 'ஏழை மகளை'த் திருமணஞ் செய்ய விரும்பியதேயாகும். அப்பெண்மணி இருவரை மணந்து விலகிய பாவியாம்! அந்தோ! கிறிஸ்து யாருக்காக உலகில் வந்தார்? ஆர்ச் பிஷப் பதிலிறுப்பாராக. பைபில் என்ன சொல்கிறது? சத்தியச் சுவிசேஷம் என்ன சொல்கிறது?

"* * * தரித்திரருக்குச் சுவிசேஷம் பிரசங்கிக்கப்படுகிறது"—மத்தேயு : 11 : 5.

"நீதிமான்களை யல்ல பாவிகளையே மனந்திரும்ப வேண்டுமென்று அழைக்க வந்தேன் என்றார்".—லூக்கா : 5 : 32.

"பரிசேயரில் ஒருவன் தன்னோடு போஜனம் பண்ண வேண்டுமென்று அவரை (கிறிஸ்துவை)க் கேட்டுக்கொண்டான்; அவர் அந்தப் பரிசேயன் வீட்டுக்குப் போய்ப் பந்தியிருந்தார். இதோ அந்த ஊரில் பாவியெனப் பேர் வாங்கின ஒரு ஸ்திரீ அவர் பரிசேயன் வீட்டிலே பந்தியிருக்கிறதையறிந்து ஒரு வெள்ளைக்கல் ஜாடியில் பரிமளத் தைலம் கொண்டுவந்து அவர் பாதத்தருகே பின்னாக நின்று அழுது அவருடைய பாதங்களைத் தன் கண்ணீரினால் நனைக்கத் தொடங்கித் தன் தலைமயிரினால் துடைத்து அவர் பாதங்

களைத் திரும்பத் திரும்ப முத்தஞ்செய்து பரிமள தைலத்தைப் பூசினாள். அவரையழைத்த பரிசேயன் அதைக் கண்டு இவர் தீர்க்கதரிசி யென்றால் தம்மைத் தொடுகிற ஸ்திரீ இன்னாளென்றும் இப்படிப்பட்டவளென்றும் அறிந்திருப்பார்; இவள் **பாவியாயிற்றே** என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். இயேசு அவனிடம்: சீமானே, உனக்கு நான் ஒரு காரியஞ் சொல்லவேண்டுமென, அவன்: சொல்லும், போதகரே என்றான். அப்பொழுது அவர்: ஒருவனிடம் இரண்டு பேர் கடன் பட்டிருந்தார்கள்; ஒருவன் ஐந்நூறு திநாரியமும் மற்றவன் ஐம்பது திநாரியமுங் கொடுக்க வேண்டியதாயிருந்தது. கடனைத் தீர்க்க அவர்களுக்கு நிர்வாக மில்லாதபோது இருவருக்கும் மன்னித்து விட்டான். இவர்களில் எவன் அவனிடம் அதிக அன்பாயிருப்பான்? அதைச் சொல் எனச் சீமான்: எவனுக்கு அதிகம் மன்னித்து விட்டானோ அவனே என்று நினைக்கிறேன் என்றான். அவர் அவனிடம்: சரியாய் நிதானித்தாய் என்று சொல்லி அந்த ஸ்திரீயின் பக்கமாய்த் திரும்பிச் சீமானை நோக்கி: இந்த ஸ்திரீயைப் பார்; உன் வீட்டிற்குள் வந்தேன், நீ என் கால்களுக்குத் தண்ணீர் தந்ததில்லை. இவளோ தன் **கண்ணீரினால் என் கால்களை நனைத்துத்** தலைமயிரினால் அவைகளைத் துடைத்தாள். நீ என்னை முத்தஞ் செய்ததில்லை. இவளோ நான உள்ளே வந்தது முதல் என் பாதங்களை ஓயாமல் முத்தஞ்செய்தாள். நீ என் தலையில் எண்ணெய் பூசினதில்லை, இவளோ என் பாதங்களில் பரிமள தைலம் பூசினாள். ஆதலால் நான் உனக்குச் சொல்லுகிறேன்: **இவள் செய்த அநேக பாவங்கள் மன்னிக்கப்பட்டன.** இவள் மிகவும் அன்பு கூர்ந்தாளே. எவனுக்குக் கொஞ்சம் மன்னிக்கப்படுகிறதோ அவன் கொஞ்சமாய் அன்பு கூருவானென்று சொல்லி அவளைப் பார்த்து: **உன் பாவங்கள் மன்னிக்கப்பட்டன**

என்றார். அப்பொழுது கூடப் பந்தியிருந்தவர்கள் : பாவங்களையும் மன்னிக்கிற இவர் யார் என்று தங்களுக்குள்ளே சொல்லிக்கொள்ளத் தொடங்கினார்கள். அவரோ அந்த ஸ்திரீயினிடம் : உன் விசுவாசம் உன்னை ரட்சித்தது. சமாதானமாய்ப் போ " என்றார்.—லூக்கா : 7 : 36 - 50.

" சகல ஆயக்காரரும் பாவிகளும் அவர் சொல்வதைக் கேட்க அவரண்டை வந்து கொண்டிருந்தார்கள். பரிசேயரும் வேத பாரகரும் முறுமுறுத்து : இவர் பாவிகளை ஏற்றுக்கொண்டு அவர்களோடு சாப்பிடுகிறார் என்றார்கள்.

அவர்களுக்கு அவர் இந்த உவமையைச் சொன்னார் : உங்களில் நூறு ஆடுகளையுடைய எந்த மனுஷன் அவைகளில் ஒன்று காணமற்போனால் தொண்ணூற்றொன்பது ஆடுகளையுங் காட்டிலே விட்டுப்போய்க் காணமற்போன ஆட்டைக் கண்டுபிடிக்குமளவும் தேடித்திரியான் ? கண்டு பிடிக்கவே அவன் சந்தோஷமாய் அதைத் தன் தோளின் மேல் போட்டுக்கொண்டு வீட்டுக்கு வந்து சிநேகிதரையும் அயலாரையுங் கூட வர வழைத்து : காணமற் போன என் ஆட்டைக் கண்டு பிடித்தேன், என்னோடு சந்தோஷப்படுங்கள் என்பானே ; அதுபோலவே மனந்திரும்ப அவசியமில்லாத தொண்ணூற்றொன்பது நீதிமான்களைப்பற்றி யுண்டாகும் சந்தோஷத்திலும் மனந்திரும்பும் ஒரே பாவியினிமித்தம் பரலோகத்தில் உண்டாகும் சந்தோஷம் அதிகமாகுமென்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

அன்றியும் பத்து வெள்ளிக் காசையுடைய எந்த ஸ்திரீ அதில் ஒரு வெள்ளிக் காசு காணமற் போனால் விளக்கைக் கொளுத்தி வீட்டைப் பெருக்கி அதைக்கண்டு பிடிக்கிற வரைக்கும் கவனமாய்த் தேடாமலிருப்பாள் ? கண்டு பிடிக்கவே, தன் சிநேகிதிகளையும் அயல்வீட்டுக்காரிகளையுங் கூட வரவழைத்து : காணமற்போன வெள்ளிக் காசைக் கண்டு பிடித்தேன். என்னோடு சந்தோஷப்படுங்கள்

என்பாளே. அதுபோலவே, மனந்திரும்புகிற ஒரே பாவியி னிமித்தம் கடவுளின் தூதருக்குள் சந்தோஷமுண்டாகு மென்று உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்"

—லூக்கா : 15 : 1 - 10

கிறிஸ்து தரித்திரர்க்கென்றே வந்தார்; பாவிகளுக் கென்றே தோன்றினார். அவரடிச்சுவட்டைப் பற்றி நடப்போரும் தரித்திரர்க்கென்றும் பாவிகளுக் கென் றும் வாழ்தல் வேண்டும்; உழைத்தல் வேண்டும். கிறிஸ்து கிறிஸ்து என்று உதட்டளவில் சொல்வ தாலும், அவர்தஞ் சுவிசேஷத்தைப் படிப்பதாலும், அதைப் பிரசாரஞ் செய்வதாலும் மட்டும் ஒருவர் கிறிஸ்துவின் அடியவராகார். தரித்திரர் நலங் கருதியும், பாவிகள் நலங்கருதியும் மனமாரப் பாடுபடுவோரே கிறிஸ்துவின் அடியவராவர்.

பிஷப்புக்கள் நீண்ட அங்கிகளைத்தரித்துச் சுவிசே ஷத்தைப் பிரசாரஞ் செய்கிறார்கள்; ஜெபஞ் செய்கிறார் கள். ஆனால் அவர்கள் தரித்திரர்க்கென்றும் பாவிகளுக் கென்றும் வாழ்கிறார்களில்லை. அவர்கள் பிரபுக்களுக் கென்றே வாழ்கிறார்கள். பிரபுக்களுக்கென்று வாழ் வோர் எங்ஙனங் கிறிஸ்துவுக்கு அடியவராயிருத்தல் கூடும்?

## பிறர் குற்றம்

கிறிஸ்துவின் அடியவர் பிறர் குற்றம் பாராட்ட லாகாது. பிறர் குற்றம் பாராட்டுவோர் தங்குற்றம் உணராதவராவர். அவர் தெய்வப்பிள்ளைகளாதல் அரிது. குறைவிலா நிறைவாயிருப்பவன் ஆண்டவன் ஒருவனே.

"குறைவிலா நிறைவே கோதிலா அமுதே * * *

* * * " என்பது திருவாசகம். இவ்வுண்மை யுணர்வோர் பிறர் குற்றம் பாராது தங்குற்ற முணர்ந்து அதைக் களையவே முயல்வர். இதுபற்றிச் சுவிசேஷம் சொல்வது வருமாறு :—

> "நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைக் கவனியாமல் உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிற தென்ன? அல்லது நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தைப் பாராமலிருந்துகொண்டு உன் சகோதரனிடத்தில் : சகோதரனே, நான் உன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப் போடுகிறேன் பொறு என்று நீ சொல்வதெப்படி? மாயக்காரனே, முன்பு உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை எடுத்துப்போடு. பின்பு உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பை எடுத்துப்போடத் தெளிவாய்ப் பார்ப்பாய்."
>
> —லூக்கா : 6 : 41 - 2

இத்திருமொழியின் நுட்பம், காண்டர்பரி ஆர்ச்பிஷப் முதலியோர் நெஞ்சில்நின்று, இரத்தத்தில் ஒன்றியிருந்தால், எட்வர்ட் விரும்பிய பெண்மணியைப் பொல்லார் என்று கருதி ஒதுங்கிச் செல்லார்; பிரபுக்கள் செய்த சூழ்ச்சிக்குத் துணை போயிரார்; தம்மைக் குணமுடையாரெனக் கருதி இறுமாப்படையார்.

> "தன்னை உயர்த்துகிறவனெவனும் தாழ்த்தப்படுவான். தன்னைத் தாழ்த்துகிறவன் உயர்த்தப்படுவான்."
>
> —லூக்கா : 18 : 14

## மன்னிப்பு

எட்வர்ட் விரும்பிய பெண்மணி பாவியாயிருக்கலாம். பாவியாயிருப்பவரைப் பாவியாக விடுவதோ அறம்? பாவங் கருதி அவரை அழுமாறு தூண்ட வேண்டுவது அன்பர் கடமை. அவ்வூழியத்தை மேற்

கொண்டவரே பிஷப்புக்கள். அப்பிஷப்புக்கள் ஒருவரைப் பாவி என்று எண்ணி ஓடினால் நாளைக்கு அவர்கள் கிறிஸ்துபெருமான் முன்னிலையில் என்ன கூறுவார்கள்?

"எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போல எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்"
—மத்தேயு : 6 : 12

"அப்பொழுது பேதுரு அவரிடத்தில் வந்து : ஆண்டவரே, என் சகோதரன் எனக்கு விரோதமாய்க் குற்றஞ் செய்து வந்தால் நான் எத்தனை தரம் மன்னிக்க வேண்டும் ? ஏழுதரமட்டுமோ என்று கேட்க, இயேசு : ஏழுதரம் மாத்திரமல்ல எழுபதுதரா மட்டும் என்று உனக்குச் சொல்லுகிறேன்"—மத்தேயு : 18 : 21 - 2

"உன் சகோதரன் பாவஞ் செய்தால் அவனைக் கண்டித்துப் பேசு. அவன் மன மாறினால் அவனுக்கு மன்னிப்பாயாக. அவன் ஒரே நாளில் ஏழுதரம் உனக்கு விரோதமாய்க் குற்றம் செய்து ஏழுதரம் உன்னிடம் வந்து, நான் மன வருத்தப்படுகிறேனென்று சொன்னால் அவனுக்கு மன்னிக்க வேண்டும்" என்றார்.—லூக்கா : 17 : 3 - 4.

இவ்வறவுரைகளையும், காண்டர்பரி ஆர்ச் பிஷப் முதலியோர் நிலையையும் நேயர்கள் சிந்தித்துப் பார்ப்பார்களாக.

காண்டர்பரி ஆர்ச் பிஷப்புக்கும் மற்றவர்க்கும் பைபில் தெரியாதோ ? சுவிசேஷம் தெரியாதோ ? நன்றாகத் தெரியும் ; தெரிந்தும் என்ன பயன் ? பிரபுக்களோடு நீண்ட நாள் பழகிப் பழகி அவர்கள் மயமாகி நிற்பவர் எளிய கிறிஸ்துவின் போதனை வழி நிற்றல் அரிதே. "சொல்லுதல் யார்க்கும் எளிய அரிய

வாம் - சொல்லிய வண்ணஞ் செயல்'' என்றார் வள்ளுவனார்.

பிரபுக்களின் கூட்டுறவால் காண்டர்பரி ஆர்ச்பிஷப்பும் மற்றவரும் நீண்ட காலமாகக் கிறிஸ்துவின் உண்மைப் பிள்ளைகளாகாமல் வாழ்ந்தாலும், அவர்களிடத்துக் கிறிஸ்து பெருமானுக்குக் காழ்ப்பில்லை; கருணையேயுண்டு. கிறிஸ்துபெருமான் கருணையால் அவர்கட்கு ஒரு நல்ல வாய்ப்பு நேர்ந்தது. அவ்வாய்ப்பையாதல் அவர்கள் பயன்படுத்திக் கொண்டார்களா?

காதல் மணம் கடவுளருளால் கூடுவது. அதை நடாத்துவிக்கப் பிஷப்புக்கள் கடமைப்படல் வேண்டும். அதைத் தகையவோ மறுக்கவோ பிஷப்புக்கட்கு உரிமையில்லை. காண்டர்பரி ஆர்ச்பிஷப்பும் மற்றவரும் என் செய்தனர்? எட்வர்டின் காதல் மணத்தைத் தகைய முயன்றனர்; அதை நடாத்துவிக்க மறுப்புரை பகர்ந்தனர். இது கிறிஸ்துவ தருமமாகாது. கிறிஸ்துவின் அருளால் நேர்ந்த வாய்ப்பையும் பிஷப்புக்கள் நன்முறையில் பயன் படுத்தினார்களில்லை.

பரலோகத்துள்ள கிறிஸ்துபெருமான், "அந்தோ! என்ன அநியாயம்! என் பெயரால் அநியாயம்! என் பெயரை முழக்கிக் கொண்டு பிஷப்புக்கள் அநியாயஞ் செய்கிறார்கள்! காதல் மணத்துக்குக் கேடு சூழ்கிறார்கள்! காதல் மணத்துக்குக் கேடு சூழ இவர்கள் யார்? பிஷப்புக்கள் என்ன செய்கிறார்களென்று அவர்கட்குத் தெரியவில்லை. பாவம்! பாவம்!'' என்று மனமிரங்கி, எட்வர்ட்டின் காதல் மணத்துக்குக் கருணை செய்திருப்பார்.

காதல் மணத்துக்குக் கேடுசூழ முயன்ற பிஷப்புக் கள் கிறிஸ்துவின் திருவுள்ளக் குறிப்பை உணரும் ஆற்றலுடையவர்களல்லர். ஏழைகளிடத்தன்பும் பாவி களிடத்திரக்கமும் உடையவர்களே கிறிஸ்துவின் திரு வுள்ளக் குறிப்பை யுணரவல்லவர்களாவார்கள். பிர புக்கள் வழி நிற்கும் பெரிய பிஷப்புக்கள் கிறிஸ்துவ தருமத்துக்கு மாறுபட்டு நடந்தார்கள். அவர்களைக் கேட்பார் யார்? கிறிஸ்து பெருமான் ஒருவரே அவர்தம் அநியாயத்தைக் கேட்டல் வேண்டும். நியாயத் தீர்ப் புக்கு முன்னரே பிஷப்புக்கள் தங்கள் தவறுதல்களை உணர்ந்து கசிந்து கசிந்து உருகுவார்களாக; கிறிஸ்து வின் கருணைக்குத் தங்களை உரியவர்களாக்கிக் கொள் வார்களாக.

எட்வர்ட் விரும்பிய பெண்மணியி னிடத்தில் குறைபாடுக ளிருக்கலாம். அவைகளை அவர்க்குணர்த்தி அவரை நல்வழிப் படுத்தவன்றோ பிஷப்புக்கள் முயன் றிருத்தல் வேண்டும்? அரசியல் கூட்டத்தவருடன் கூடிப் பிஷப்புக்கள் அன்பை இழப்பது அறிவுடைமை யாகாது. எட்வர்ட் காதலித்த நங்கையார் நாத்திகரல் லர்; அவர் கிறிஸ்து நேயர்; கோயிலுக்குச் செல்வோர். அவரைக் கசிந்து கசிந்து முறையிடச் செய்வது அருங் காரியமன்று. நன்முறையில் கிறிஸ்துவின் தொண்டு செய்யவா பிஷப்புக்கள் வாழ்கிறார்கள்? அவர்கள், மாடி களில் உலாவி, மஞ்சத்தில் உறங்கி, விலாப்புடைக்கத் தின்று, களியாட்டயரும் கூட்டத்துடன் வாழ்கிறார்கள். அவர்கள் எளியரைக் காயாது என் செய்வார்கள்? நீண்ட அங்கியும், பருத்த பட்டையும் ஒருவரைக் கிறிஸ்

துவராக்கா. ஏழைகளிடத்தன்பும், பாவிகளிடத்திரக்கமும் ஒருவரைக் கிறிஸ்துவராக்கும். காண்டர்பரிஆர்ச்பிஷப்பும் மற்றவரும் சோதனையில் வழுக்கி வீழ்ந்தனர். அவர்கள் தங்கள் பிழை குறித்து இனியாதல் வருந்தி வருந்தி அழுவார்களாக; அழுதால் அவர்களையுங் கிறிஸ்து காப்பார்.

## எட்வர்ட் வெற்றி

*எட்வர்ட் என் செய்தார்? அவர் கிறிஸ்துவின் வழிநின்றாரா? சாத்தான் வழி நின்றாரா? அவர் முன்னே உறுதி மொழியும் நின்றது; சாம்ராஜ்யப் பதவியும் நின்றது. உறுதிமொழி கிறிஸ்துவின் இருக்கை; சாம்ராஜ்யப் பதவி சாத்தான் இருக்கை. எட்வர்ட் எவர் பக்கம் நின்றார்? அவர் கிறிஸ்துவின் பக்கமே நின்றார். சாத்தான் வல்லமை அவரை ஒன்றுஞ் செய்யவில்லை. சாத்தான் ஆற்றல் எட்வர்ட் முன்னே விழுந்துபட்டதென்றே கூறலாம். சோதனையில் எட்வர்ட் வெற்றியே பெற்றார். சோதனையில் வெற்றி பெற்றவரல்லரோ தியாகமூர்த்தியாதல் கூடும்?*

# X தியாகம்

உறுதிமொழி காப்பது ஆண்டவன் ஆணைவழி நிற்பதாகும். ஆண்டவன் ஆணைவழி நிற்பதாவது உரிமை யுணர்வு வழி நின்று வாழ்வது. உரிமையே மக்களின் உயிரணி. அவ்வணி இழந்தவர் மக்களாகார். அவர் உயிர்நிலை யற்றவர்; என்புதோல் போர்த்தவர். எக் காரணம் பற்றியும் உரிமையுணர்வை இழத்தலாகாது. எட்வர்ட் உரிமை யுணர்வினர்; அதை உயிரணியாக் கொண்டவர். அவர் உரிமையின் பொருட்டு ஒரு பெரும் சாம்ராஜ்ய இன்பத்தைத் துறந்தார். எட்வர்ட் மனிதரில் மனிதரானார். அவர் வாழ்வில் வெற்றி பெற்றவரானார்.

எட்வர்ட் ஒரு பெருஞ் சாம்ராஜ்யத் தலைமை பூண்டவர். அத்தலைமைக்குமேல் வேறொரு தலைமை அச்சாம்ராஜ்யத்திலில்லை. அப்பெரும் பதவியிலுள்ள ஒருவர் தமது மனத்துக்கிசைந்த ஒரு பெண்மணியை மணக்க விரும்பினார். அவ்விருப்பத்துக்கு மந்திரி சபை இசைந்து வரவில்லை. சாம்ராஜ்யத் தலைவருக்குச் சோதனை ஏற்பட்டது. என்ன சோதனை? சாம்ராஜ்யம் பெரிதா? காதல் பெரிதா? என்னுஞ் சோதனை.

## உரிமையா? பதவியா?

எட்வர்ட்டுக்கு சாம்ராஜ்யம் பெரிதாகத் தோன்றிற்றா? காதல் பெரிதாகத் தோன்றிற்றா? காதலே பெரிதாகத் தோன்றிற்று. அவர் என்ன நினைத்

திருப்பர்? 'நாம் ஒரு பெரிய சாம்ராஜ்யத் தலைவர்; நமக்குமேல் வேறொரு தலைவர் சாம்ராஜ்யத்திலில்லை. இத் தகைத் தலைமை தாங்கியுள்ள நமக்கு, நாம் விரும்பிய பெண்ணை மணஞ் செய்யும் உரிமையில்லையே. என்னே சாம்ராஜ்யத் தலைமை!'' என்று நினைத்திருப்பர். இந் நினைவெழும் நெஞ்சினர்க்குச் சாம்ராஜ்யத் தலைமை எங் ஙனந் தோன்றும்? அஃது இன்பமாகத் தோன்றுமா? அது சுமையாகத் தோன்றும்; தளையாகத் தோன்றும்; சிறையாகத் தோன்றும். உரிமையற்ற இடம் எத்தகைய தாயினும் அது சிறையேயாகும்.

சகோதரர்களே! உலக வாழ்வை நோக்குங்கள். பதவி இன்பத்தைச் சிந்தியுங்கள்! ஒரு பெரும் சாம்ராஜ் யத் தலைவருக்குத் தாம் விரும்பிய நங்கையை மணஞ் செய்து கொள்ளும் உரிமை யில்லை! இவ்வுரிமை காட் டில் விலங்கோடு வாழும் குறவனுக்கு உண்டு. ஒரு பெரும் மன்னர் மன்னருக்கு அவ்வுரிமை இல்லை! என்னே உலகம்! இங்கிலாந்து உரிமை நாடாம்!

எட்வர்ட் எத்தகையவர்? அவர் உரிமையில் பிறந்து, உரிமையில் வளர்ந்து, உரிமை வண்ணமாயிருப் பவர். அத்தகைய ஒருவர் சாம்ராஜ்யப் பதவியின் பொருட்டு உரிமையைப் பறிகொடுப்பரோ? ஒருபோ துங்கொடார். அவர் என் செய்தார்? சாம்ராஜ்யப் பதவி யையே துறந்தார். துறந்தமையால் அவர் உரிமைக் கடவுளுக்கு உரிமைப் பிள்ளையானார்.

காதல், உரிமை யுணர்வினின்றும் பிறப்பது. அதைப் பறிகொடுப்பது உரிமையைப் பறிகொடுப்ப தாகும். மக்கள் எதையும் பறி கொடுக்கலாம். ஆனல்

உரிமையை மட்டும் பறிகொடுத்தலாகாது. உயிருள்ள வரை உரிமைக்காகப் போராடியே தீர்தல் வேண்டும். உரிமை எல்லாவற்றினும் விழுமியது. அதன் பொருட்டு எதையும் இழக்கலாம். உரிமை இழந்து மன்னராக வாழ்வதினும், உரிமை இழவாது ஏழையாய் வாழ்வது சிறப்பு. உலகில் மக்கள் எப்படி வாழ்தல்வேண்டும்? *"நாமார்க்குங் குடியல்லோம்" என்றும், *"என்று நாம் யாவர்க்கு மிடைவோ மல்லோம், இருநிலத்தில் எமக்கு எதிராவார் யாருமில்லை" என்றும் வாழ்தல் வேண்டும். இவ்வாழ்வே இன்ப வாழ்வாகும். ஆகவே, உரிமையுணர்வினின்றும் முகிழ்க்குங் காதலைப் பறிகொடுப்பது உரிமையையே பறிகொடுப்பதாகும். காதல் பெரிது; மிகப் பெரிது; அஃது உலகினும் பெரிது; அண்டங்களினும் பெரிது; எல்லாவற்றிற்கும் மேலாகவுள்ள கடவுளினும் பெரிது. காதலில் ஈடுபட்டவர்க்கே காதலின் பெருமை புலனாகும்.

எட்வர்டுக்குச் சாம்ராஜ்யத்தினுங் காதலே பெரிதாகத் தோன்றிற்று. சாம்ராஜ்ய இன்பத்தின் பொருட்டு எட்வர்ட் காதலை நெகிழ விட்டிருப்பாராயின், அவரை உலகம் மனிதராகவே கொள்ளாது. இப்பொழுது எட்வர்ட் எப்படி மதிக்கப்படுகிறார்? அவர் மனிதரில் மனிதராக மதிக்கப்படுகிறார்; உரிமைக்கு உறையுளாக மதிக்கப்படுகிறார்; காதலுக்கு ஓர் இலக்கியமாக மதிக்கப்படுகிறார். தற்கால உலகில் அவரே பெரியவராக மதிக்கப்படுகிறார்.

---

*அப்பர்.

உரிமை யுணர்வுடையார் எதையுந் தியாகஞ் செய்ய முற்படுவர். அவ்வுணர்வில்லாதார் தியாகத்துக்கு அஞ்சுவர். எட்வர்ட், உறுதிமொழியின் பொருட்டு - உரிமைக் காதலின் பொருட்டு - பெருந் தியாகஞ் செய்தார். அவர் தியாகத்தின் பொருளானார்; தியாகத்தின் இலக்கியமானார்; தியாகமேயானார் என்றுங் கூறலாம். உலகச் சரித்திரத்தில் எட்வர்டின் தியாகத்தைப் போன்றதொரு தியாகமில்லை. எட்வர்டின் தியாகம் உலகத்துக்கே ஒரு பெரும் பாடமாக நிற்கிறது.

தேசங்களின் பொருட்டும், சாம்ராஜ்யங்களின் பொருட்டும் உலகில் போராட்டம் மிகுந்துள்ள வேளையில் எட்வர்ட் ஒரு பெரும் சாம்ராஜ்யப் பதவியைத் துரும்பாக நினைந்து அதைத் துறத்தல் நேர்ந்தது. அந்நிகழ்ச்சி நேர்ந்த சமயத்தை உன்னுதல் வேண்டும். உன்ன உன்ன ஆண்டவன் திருவுள்ளக் குறிப்புப் புலனாகும். உலகை நல்வழிப் படுத்த ஆண்டவன் இத்தகைய நிகழ்ச்சிகள் நேரத் திருவுள்ளங் கொள்வன். அதைக் கண்டு உலகம் மனந்திரும்புதல் வேண்டும். பொல்லாத உலகமே! சாத்தான் உலகமே! போராட்டத்தை ஒழிப்பாயாக; அவரவர் இயற்கைவழி நடக்க விடுவாயாக; நீ ஆண்டவன் உலகமாவாய்; உரிமை இன்பம் நுகர்வாய்.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை அறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே."—திருமூலர்

## மனிதர் யார்?

தியாகத்தைப் பற்றிய சரித்திரங்கள் பல உண்டு. ஒவ்வொன்றைப் பற்றி ஒவ்வொரு விதத் தியாகம் நிகழ்ந்திருக்கிறது. எட்வர்டின் தியாகம் உரிமையை அடிப்படையாகக் கொண்டது. உரிமையின் பொருட்டு அவர் செய்த தியாகத்தை உன்ன உன்ன அவர்தம் உள்ளநிலை புலனாகும்.

எட்வர்ட் தியாகஞ் செய்த பதவி எத்தகையது? அஃது ஒரு ஜில்லா போர்ட் தலைமைப் பதவியா? ஒரு சட்டசபைத் தலைமைப் பதவியா? ஒரு மாகாண மந்திரி பதவியா? ஒரு கவர்னர் பதவியா? ஓர் அரச பதவியா? ஒரு சக்கரவர்த்தி பதவியா? அஃது இவையெல்லாவற்றினும் பெரிதாய சாம்ராஜ்யப் பதவியன்றோ?

சிறு சிறு அமைப்பின் தலைமைப் பதவியை இழக்க மக்கள் எளிதில் ஒருப்படுகிறார்களா? தம்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள் மலிந்தாலும், தம்மைப் பிடித்துத் தள்ளினாலும், ஊரார் 'சீ! சீ!' என்று எள்ளினாலும் ஒரு சிறிய அமைப்பின் பதவியை விட்டகல இக்காலத்தவர் விரும்புகிறாரா? அவர் மானத்தினும் பதவியையே பெரிதாக மதிக்கிறார்; அதற்காக அவர் எவ்வளவு பாடுபடுகிறார்! உழைக்கிறார்! இழிதுறைகளிலும் இறங்குகிறார்! அவர்தம் மனம் உடம்பினுங் கடுமையாகப் பதவியைப் பற்றிக் கிடக்கிறது. அவர்கள் மனிதர்களா? ஒரு பெரும் சாம்ராஜ்யப் பேற்றை உரிமையின் பொருட்டு ஒரு நொடியில் தியாகஞ் செய்த ஒருவர் மனிதரா?

மனிதப் பிறவி தாங்கினவரெல்லாரும் மனிதராவரோ? மனிதரிலுங் கல்லுண்டு; மரமுண்டு; விலங்

குண்டு; மானங் கெட்ட மருளுண்டு. மனிதரில் மனிதராக விளங்குவோரே மனிதப் பிறவி தாங்கிய பயனைப் பெற்றவராவர். இதோ! இந்நாளில் எட்வர்ட் மனிதரில் மனிதராக விளங்குகிறார். உரிமையுணர்வு அவரை மனிதரில் மனிதராக்கியது; தியாகம் அவரை மனிதரில் மனிதராக்கியது. அவர் உரிமை யிழந்து, 'வானேயும் பெறின் வேண்டேன்; மண்ணாள்வான் மதித்துமிரேன்' என்று உறுதி கொண்டார். அதனால் அவர் தியாக மூர்த்தியானார்; தியாக மூர்த்திகள் சங்கத்தில் தலைவரானார்.

தியாகம் வேறு, எட்வர்ட் வேறா? தியாகமே எட்வர்ட்; எட்வர்டே தியாகம். தியாகம் என்பதற்கு அகராதியில் இனி எட்வர்ட் என்று பொருள் பொறிக்கலாம்.

## இராமபிரான்

எட்வர்ட் தியாகம் நினைவுறும்போது, அதைத் தொடர்ந்து இராமபிரான் தியாகமும் நினைவில் உறுகிறது.—அயோத்தியின் முடிசூட்டு விழா. அயோத்தி முழுவதும் அவ்விழா மயம். முனிவரெல்லாம் போந்துள்ளார்; மன்னரெல்லாம் கூடியுள்ளார்; சேனைகள் திரண்டுள்ளன; ஆடவர் அணி அணியாக நிற்கிறார்; மகளிர் நிரை நிரையாக நிற்கிறார்; கங்கை நீர் காத்துக் கொண்டிருக்கிறது; வசிட்டர் சித்தமாயிருக்கிறார்; எங்கணும் மகிழ்ச்சி; மகிழ்ச்சியின் பொங்கல். அந்நிலையில்-அவ்வேளையில் - என்ன நிகழ்ந்தது? கைகேயி நுழைக்

தார்; இராமபிரானைக் கண்டார்; கண்டு என்ன சொன்னார்?

"ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு
பூழிவெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி
ஏழிரண் டாண்டின் வாவென் றியம்பின னரச னென்றாள்"

இவ்வுரை கேட்டதும் இராமபிரான் முகம், "அப் பொழு தலர்ந்த செந்தா மரையினை வென்ற தம்மா!" அவர் உடனே என்ன செய்தார்? "அன்னாய்! மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண்டேன்" என்று கூறிக் காடு நோக்கினார்.

இராமபிரானுக்கு என்ன இல்லை? தோள்வலி இல்லையா? ஆள்வலி இல்லையா? கோதண்டமில்லையா? முனிவரெல்லாம் அவர் பக்கம்; மன்னரெல்லாம் அவர் பக்கம்; படைகளெல்லாம் அவர் பக்கம்; குடிகளெல்லாம் அவர் பக்கம்; இலக்குமணன் அவர் பக்கம்; எல்லாம் அவர் பக்கம். எல்லாமுடைய இராமபிரான் எதிர்ப்பை நினைந்தாரா? அந்நினைவே அவர்தம் நெஞ்சில் எழவில்லை. "போகின்றேன் விடையுங் கொண்டேன்" என்று அவர் புறப்பட்டார்.

மிக அணித்தே நெருங்கி வந்த அரச இன்பத்தை - திருமுடியை - நொடிப்பொழுதில் இராமபிரான் துறந்தார்! அஃதன்றோ தியாகம்? அத்தியாகம் அந்நாளையது; எட்வர்ட் தியாகம் இந்நாளையது.

## சகோதர வாஞ்சை

எட்வர்ட் அரசு துறந்த வேளையில் வெளியிட்ட அறிக்கையிலும், சாம்ராஜ்ய மக்களுடன் பேசிய பேச்

சிலும் பல செம்பொருள்கள் செறிந்து கிடக்கின்றன. அவைகளுள் சிறப்பாகக் குறிக்கத் தக்கன இரண்டு. ஒன்று சகோதர வாஞ்சை; மற்றொன்று பெண்ணின் பெருமை.

அன்புக்கு அறிகுறி சகோதர வாஞ்சை. தம்முடன் பிறந்த சகோதரரை நேசியாத ஒருவர், உலகை எங்ஙனம் நேசிக்க வல்லார்? உலகிலுள்ள உயிர்களை யெல்லாம் சகோதரமாக் கொண்டு, அவைகளைத் தம்மைப்போல் நேசிக்கும் நிலையே பந்தத்தை யறுப்பது; வீடுபேற்றை யளிப்பது. தன்னலமே பந்தத்தைப் பெருக்குவது; வீடுபேற்றைத் தகைவது.

சகோதர நேயத்தை வளர்ப்பதற்கென்று குடும்பங்கள் அமைகின்றன; சகோதரர்கள் தோன்றுகிறார்கள். குடும்பத்தில் தம்முடன் பிறந்த சகோதரரைத் தம்மைப்போல் நேசிப்பவரிடம் உலக சகோதர நேயம் (Universal Brotherhood) தானே வளரும். உடன்பிறந்தவரை நேசியாத ஒருவர் உலகை நேசித்தல் அரிது. உலக சகோதர நேய வளர்ச்சியின் பொருட்டுக் குடும்பமென்றும் சகோதரமென்றும் இயற்கையில் அமைகின்றன. சகோதரநேயம் அற்றவர் இயற்கைவழி நில்லாதவரென்க.

கைகேயி, இராமபிரானை வேறாகவும், பரதனை வேறாகவும் பிரித்துப் பேசினார். இராமபிரானோ அவ்வாறு பிரித்துப் பேசினாரில்லை. அவர், "பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ" என்றார். இராமபிரான் தியாகமூர்த்தி யாதலான், அவர் தம்பியின்றும் பரதனை வேறாகக் கொண்டாரில்லை. தியாக

முள்ள விடத்தில் சகோதர நேயமும் இருக்கே தீரும். இராமபிரான், "பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ" என்று தம்முடன் பிறந்தவரைத் தம்மைப்போலவே நேசித்தமையால், அவர் வேடனையும், குரங்கையும், அரக்கனையும் சகோதரராகக் கொள்ளுந் தன்மையுடையவரானார். இராமபிரான் சபரியின் அன்புக்கு எளிமையானதும், அனிலுக்கு அருளியதும், இன்ன பிறவுங் கருதற்பாலன.

தன்னுடன் பிறந்த சிங்கமுகன் மாண்டபோது சூரபன்மன் என்னென்னவோ சொல்லி அழுதான். அவ்வழுகையில் சகோதரவாஞ்சையே தேங்கிக் கிடக்கிறது. ஒரு குறிப்பு வருமாறு:—

"பொன்னை நிலந்தன்னைப் புதல்வர்களை மங்கையரைப்
பின்னை யுளபொருளை யெல்லாம் பெறலாகும்
என்னை யுடைய இளையோனே இப்பிறப்பில்
உன்னை யினிப்பெறவ லுண்டோ உரையாயே"

எட்வர்ட் தியாகத்திற் சிறந்தவராதலான், தமது அரச பதவியைத் தம்முடன் பிறந்தவர்க்கு வழங்கிச் சென்றார். "பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ" என்னும் மொழிக்கு எட்வர்ட் இலக்கியமானார்.

அறியாமை மிகுந்த பிரபுக்களுக்கும் மற்றவர்கட்கும், எட்வர்டும் யார்க்கோமகனும் வேறாகத் தோன்றலாம். எட்வர்ட்டுக்கு அங்ஙனந் தோன்றவில்லை. "நாம் அனைவரும் இப்பொழுது ஒரு புதிய மன்னரைப் பெற்றிருக்கிறோம். அவர்க்கும் குடிமக்களாகிய உங்களுக்கும், மகிழ்வும் நலனும் உண்டாக

என்று மனமார வாழ்த்துகிறேன்" எனவருஉம் எட்வர்ட் மொழிகளை நோக்குக. அவைகளில் சகோதர நேயம் உறைதல் காண்க.

## பெண்ணின் பெருமை

மற்றொன்று பெண்ணின் பெருமை. உலகில் ஆண் மகன் எவன்? பெண்ணின் பெருமையுணர்ந்தவனே ஆண்மகனாவன். எட்வர்ட், பெண்ணின் பெருமையுணர்ந்த பெரியவர். அவர் தமது பேச்சில் "யான் காதலித்துள்ள பெண்ணணங்கின் கூட்டுறவின்றி அரசைத் தாங்குதல் என்னால் இயலாதென்பதை நன்கு தெளிந்தேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

சாம்ராஜ்யத் தொண்டுக்கு முதலாவது வேண்டற்பாலது அன்பு. அன்புக்கு உறையுள் பெண்மை. பெண்மையுடன்கூடி வாழ வாழ ஆண்மையில் அன்பு சுரக்கும். தனித்த ஆண்மையில் அன்பு சுரவாது. ஆணின் அன்பூற்று, வன்கண் என்னும் பாறையால் அடைபட்டுக் கிடக்கிறது. அவ்வாண், பெண்ணின் சேர்க்கை பெற்றதும் அவனது வன்கண் பாறை உடைபடும்.

பெண்ணுடன் கூடி வாழாத மகன் முழுமையனல்லன். பெண் பாதி சேர்ந்தால் அவன் முழுமையனாகிறான். இயற்கைக்கூறு ஒவ்வொன்றும் பெண் ஆணாயிருத்தல் கண்கூடு. பெண் ஆணாயுள்ள இயற்கையின் காரணமும் பெண் ஆணாகவே இருத்தல்வேண்டும். காரணம் எது? இறை. இறையைப் பெண் ஆணாகவே நம் முன்னோர் போற்றினர்.

"குவளைக் கண்ணிக் கூறன் காண்க
அவளுந் தானும் உடனே காண்க" (மாணிக்கவாசகர்)

என்றும்,

" அம்மையே அப்பா ஒப்பிலா மணியே" (மாணிக்கவாசகர்)

என்றும்,

" மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல்ல கதிக்கி யாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"
(சம்பந்தர்)

என்றும்

ஆன்றோர் அருளியுள்ளதைச் சிந்திக்க. ஆகவே உலகில் வாழும் ஒவ்வொருவனும் ஒவ்வொருத்தியுடன் வாழ்வதே இயற்கை - இறைநெறி நின்று ஒழுகுவதாகும். இதுபற்றிப் " பெண்ணின் பெருமை " என்னும் நூலில் விரித்துக் கூறியுள்ளேன். விரிவு அந்நூலிற் காண்க.

எட்வர்ட் பெண்ணுடன் வாழ விரும்பியது இயற்கை - இறை நெறிக்கு அரண் செய்வதாகும். சாம்ராஜ்யத் தொண்டுக்கென்று பெண்ணுடன் வாழ்தலை அவர் விரும்பியது ஈண்டுச் சிறப்பாகக் கருதத்தக்கது. மனத்துக்கினிய பெண்ணுடன் வாழ்வதே தொண்டுக்கு எழுச்சி யூட்டுவதாகும். அதனால் எட்வர்ட், "யான் காதலித்துள்ள பெண்ணணங்கு........." என்றார். தாம் காதலித்த பெண்மணியைத் தாம் மணஞ் செய்தற்குத் தாம் ஏற்றுள்ள சாம்ராஜ்யத் தலைமையே ஊறாக நிற்கச் சிலர் சூழ்ச்சி செய்தமையான், அவர் அத் தலைமைப் பதவியைத் துறத்தல் நேர்ந்தது. இஃது, எட்வர்ட் பெண்ணின் பெருமை யுணர்ந்த பெரியவர் என்பதைச் செவ்வனே தெரிவிக்கிறதன்றோ ?

வாழ்வுத் துறைகள் பல. அவை எதற்கு? பெண்ணின் பெருமை யுணர்ந்து நடப்பதற்கென்க. பெரியவரென்று போற்றப்படுவோரெல்லாரும் பெண்ணின் பெருமையுணர்ந்து நடந்தவரேயாவர். அவர்தம் வரலாறுகள் நூல்களாக எழுதப்பட்டுள்ளன. அவைகளின் வாயிலாகப் பெண்ணின் பெருமையை யுணர்ந்து உலகம் நடந்து உய்தல் வேண்டும் என்னும் நோக்குடன் அவைகள் எழுதப்பட்டன.

இராமபிரான் பெண்ணின் பெருமை யுணர்ந்த வீரர். அவர் ஒரு பெண்ணரசியின் பொருட்டுக் காடு கடந்து, மலை கடந்து, யாறு கடந்து, கடல் கடந்து போராடியதை இராமாயணங் கூறுகிறது. பாரதப் போர் எவர் பொருட்டு நடந்தது? ஒரு பெண்மணியின் பொருட்டன்றோ? பெரிய புராணம் பெண்ணின் பெருமை பேசும் நூலேயாகும். திருநீலகண்ட நாயனாரை நல்வழிப்படுத்தியவர் யாவர்? அவர்தம் மனைவியாரல்லரோ? திருநாவுக்கரசருக்கு ஞானதீட்சை செய்தவர் யார்? திருஞானசம்பந்தரை உலகிற்கு வரவழைத்தவர் யார்? பெண்மணிகளே யாவர். விளக்கம் பெரிய புராணத்திற் பார்க்க.

பெண்ணின் பெருமை யுணர்ந்து நல்வாழ்வு நடாத்துவோரே பெரியவர். மற்றையோர் பேயர். எட்வர்ட் பெண்ணின் பெருமை யுணர்ந்த பெருந்தகையாளர். அவர் பெண்ணின் பொருட்டு ஒரு பெரும் பதவியை இழந்தவரல்லரோ?

# XI பணியும் பதவியும்



காதலின் பொருட்டு எட்வர்ட் சாம்ராஜ்யப் பணியைத் துறக்கலாமா? அதற்கென்று நேர்ந்த வாய்ப்பை அவர் நெகிழ விடலாமா? என்று சிலர் கருதலாம். பணிக்கஞ்சி எட்வர்ட் சாம்ராஜ்யத்தைத் துறந்தாரில்லை. பணியைத் துறத்தலும், அதற்கென நேரும் வாய்ப்பை விடுத்தலுந் தவறு என்பதை அவர் நன்கு உணர்ந்தவரே. நிலைமையை உணராது அவர்மீது பழி சுமத்துவது பாவம்.

மனிதப் பிறவி எற்றுக்கு? கல்வி கற்பதும், இல்லறமேற்பதும், பொருளீட்டுவதும் எற்றுக்கு? பணி செய்தற்கல்லவோ? பணியே மனிதனை மனிதனாக்குவது. பணி செய்யச் செய்ய மனிதரிடத்துள்ள தீய இயல்புகள் படிப் படியே குறைந்துபோகும். அத்தகைய பணியில் கருத்திருத்தாத மனிதர் மேனிலை எய்தல் இயலாது. அவர்தம் வாழ்வு சிறை நீர் போலச் சாம்பும்.

எவ்வெப்பணிக்கு எவ்வெவ்வழியில் எவ்வெவ் வாய்ப்பு நேர்கிறதோ, அவ்வவ் வழிநின்று, அவ்வவ் வாய்ப்பை நிஷ்காமிய முறையில் பயன்படுத்தி, அவ்வப் பணியை மகிழ்ச்சியொடு செய்வதே இயற்கை - இறை நெறியில் நிற்பதாகும். தத்தம் நலங்கருதாது ஒருவருக்கொருவர் செய்யும்பணி இறை பணியாய் விடுதலைக் குத் துணைபுரியும். இறை பணி என்பது தனித்து நிற்பதன்று. பயன் கருதாது உயிர்கட்குச் செய்யும் பணியே

இறை பணியாகும். தன்னலங் கருதாப் பணியே பிறவி யின் நோக்கத்தை நிறைவேற்றவல்லது. பணியைப் பற்றி, "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்னுந் தலைப்புடைய ஒருநூல் எழுதியுள்ளேன். விரிவு அந் நூலிற் காண்க.

எட்வர்ட் தமக்கு அமைந்த சாம்ராஜ்யப் பணியை வெறுத்தாரில்லை. அதற்கென நேர்ந்த வாய்ப்பையும் அவரே வலிந்து விட்டாரில்லை. சாம்ராஜ்யப் பணியில் அவருக்கு வெறுப்புத் தோன்றி யிருப்பின், அவர் இரு பத்தைந்தாண்டு இளங்கோவாகவும், ஓராண்டு மன்ன ராகவும் நின்று கடனாற்றியிரார். சாம்ராஜ்யப் பணிக் கென்றே எட்வர்ட் ஒரு பெண்மணியைக் காதலித்தா ரென்று தெரிகிறது. அவர்தம் துறவுப் பேச்சை ஊன்றி நோக்கினால் உண்மை விளங்கும். "யான் காதலிக்கும் பெண்ணணங்கின் கூட்டுறவின்றி அரசைத் தாங்குதல் இயலாது" என்பது எட்வர்டின் பொன்மொழி. 'அரசு தாங்கப் பெண்மணி தேவை' என்பது, பணியை வெறுப் பதா? பணிக்கு ஆக்கந் தேடுவதா? நேயர்களே! உன் னுங்கள்.

## பணியும் பெண்ணும்

பணிக்கு வாழ்க்கைத் துணையின் இன்றியமையா மையை எட்வர்ட் தமது துறவுப் பேச்சில் மற்றுமோ ரிடத்தில் வலியுறுத்தியுள்ளார். தம் தம்பியார் தமக்குப் பின்னர் அரசராதல் வேண்டுமென்று எட்வர்ட் கட் டளையிட்டுத் தம்பியாரின் நல்லியல்புகளை வியந்து கூறி னார்; கூறும்போது பணிக்குப் பெண்ணின் துணை தேவை என்பதையும் விளங்க வைத்தார். "எனக்கு

இதுகாறும் வாய்க்கப் பெறாததும், உங்களில் பலருக்கு வாய்த்ததுமான ஒரு நற்பேற்றை என் தம்பியார் பெற்றிருக்கிறார். அது மனைவி மக்களோடு கூடிய இன்ப வாழ்வுப்பேறு" என்று எட்வர்ட் குறிப்பிட்டது ஆழ்ந்து சிந்திக்கற்பாலது. அதன் உள்ளுறை என்னை? "யான் ஏற்றுள்ள பணிக்குப் பெண் துணையில்லை. அத்துணை பெறச் சாம்ராஜ்யப் பதவியே குறுக்கிட்டு நிற்கிறது. அத்துணை என் தம்பியார்க்கு உண்டு. ஆதலால் அப்பணிக்குரியார் அவரே" என்பது அதன் உள்ளுறை.

பணியின் ஆக்கத்துக்கென ஒருவர், தாம் விரும்பிய பெண்ணை மணஞ் செய்து கொள்ளத் தாம் ஏற்றுள்ள பதவியே குறுக்கிட்டால் அவர் என் செய்தல் வேண்டும்? பணியைத் துறப்பதா? பணிக்குத் தடையாக நிற்கும் பதவியைத் துறப்பதா? பணியைத் துறவாது பதவியைத் துறப்பதே அறம். குறிப்பிட்ட ஒரு பதவியின் வாயிலாகவே பணி செய்தல் வேண்டும் என்னும் நியதியில்லை. எந்நிலையில் நின்றும் பணி செய்யலாம். எட்வர்ட் என்ன செய்தார்? "சாம்ராஜ்யப் பதவியைத் துறப்பினுந் துறப்பேன்; பணியைத் துறவேன்" என்று உறுதி கொண்டார். அவ்வுறுதி பணியின் மாட்டு அவர்க்குள்ள ஆர்வத்தையே காட்டுகிறது.

பணி போது; பதவி வாய்ப்பு. வாய்ப்பு மாறுந் தகையது; பணி மாறுந் தகையதன்று. தோட்டிக்கும் பணி உண்டு; தொண்டைமானுக்கும் பணி உண்டு. பணியில் பெரிதுமில்லை; சிறிதுமில்லை. பணி எதுவாயினும் அதனடியில் நிஷ்காமியம் ஊர்தல் வேண்டும். அப்பணியே சிறந்தது.

எட்வர்ட் சாம்ராஜ்யத்தைத் துறந்தாரே யன்றிப் பணியைத் துறந்தாரில்லை. "அரச பாரம் என்னை விட்டகன்றது. மீண்டும் யான் நாடு நோக்கச் சென்று ளாகும். தேசத்தார் நலனை என்றும் நாடிய வண்ணமா யிருப்பேன்; மன்னருக்கு எப்பொழுதேனும் என் ஊழியம் வேண்டப்படுமானால் அதைச் செய்ய யான் தவறேன்" எனவரூஉம் எட்வர்டின் மணி மொழிகளை நோக்குக. அவைகளில் பதவித் துறவும் பணியின் வேட்கையும் இருத்தல் வெள்ளிடைமலை. ஆகவே, எட்வர்ட் பணியில் வேட்கை கொண்டே அதற்குத் தடையாயுள்ள பதவியைத் துறந்தாரெனக் கொள்க.

காதற் பெண்ணை மணஞ் செய்யக் கருதுவது பணியின் மாட்டுள்ள எழுச்சியேயாகும். பெண் வேண்டாம்; மண் வேண்டாம்; பொன் வேண்டாமென்று காட்டுக்கோ மலைக்கோ ஓடி அலைவோரே பணியை வெறுப்போராவர். எட்வர்ட் அவ்வினத்தைச் சேர்ந்தவரல்லர். எட்வர்ட் பணியை விரும்பும் பண்புடையார். அவர் பணிக்கஞ்சிச் சாம்ராஜ்யத்தைத் துறந்தார் என்று கருதுவது தவறு. பணிக்கென்றே அவர் சாம்ராஜ்யத்தைத் துறந்தாரென்க; பணிக்கென்றே அவர் திருமணஞ் செய்துகொண்டாரென்க.

# XII திருமணம்

எட்வர்ட் ஆஸ்திரியாவில் ஒரு பதியில் வதிந்து வந்தார். திருமதி ஸிம்ஸன் பிரான்ஸிலுள்ள ஒரு சிற்றூரில் வதிந்து வந்தார். நண்பர் சிலரும், உறவினர் சிலரும் எட்வர்டைப் பார்த்துப் பார்த்துச் சென்றனர். இங்கே அவர்தம் சகோதரியார் போந்தது சிறப்பாகக் குறிக்கற்பாலது.

வின்ஸர் கோமகனார் தாய் நாட்டை விடுத்து வெளி வந்ததும் பலதிற வதந்திகள் எழும்பின; பொய் மூட்டைகள் உருண்டன; பத்திரிகை யுலகில் பொல்லாத வாந்தி பேதிகளும், கொள்ளை நோய்களும் தோன்றின. அவை பிரிட்டனைக் கலக்கின. எல்லாம் நாளுக்கு நாள் தணிந்து அடங்கின.

## மக்களின் அன்பு

பெரிய பிஷப்புக்கள் குறும்புகள் மட்டும் அடங்கவில்லை. அவர்கள் சமயம் நேரும்போதெல்லாம் வின்ஸர் கோமகனாரையும், திருமதி ஸிம்ஸனையும் தூற்றியே வந்தார்கள். அத்தூற்றல்கள் பலர் உள்ளத்தைப் புண்படுத்தின. அறிஞர் சிலர் பதிலிறுக்கப் புறப்பட்டனர். அவருள் ஒருவர் திரு. எச். ஜி. வெல்ஸ் என்பவர். திரு. எச். ஜி. வெல்ஸ் உலகறிந்த பேரறிஞர் என்பதை எண்டுச் சொல்ல வேண்டுவதில்லை. அவர், பிஷப்புக்களின் பொல்லாக் குறும்புகளை மறுத்துக் கூறிய மொழிகளில் சில வருமாறு:—

எட்டாம் எட்வர்டைப் பற்றியும், அவரைச் சேர்ந்தவரைப் பற்றியும் 'ஆர்ச்பிஷப்' குறை கூறுவது நியாயமாகாது.

அவர் கூறும் முறையில் அவர்களிடம் தவறுதலில்லை. எட்வர்ட் கோஷ்டியினர் தூய வாழ்க்கையையே நடாத்தி வந்தனர். அவர்கள் பழைய வழக்க வொழுக்கங்களில் பற்றுடையவர்க ளல்ல. * * * * * * * *

யான் திருமதி ஸிம்ஸனுக்காகப் பரிந்து பேச முன்வரவில்லை. ஒரு பெண்மணியைப் பற்றி மறைமுகமாக ஈனச்சொல் புகல்வது ஆண்மை யாகாது. அவ்வாறு புகல்வோரைக் குதிரைச் சவுக்கால் அடிப்பதே நியாயமாகும். மதக் குருக்கள் இத்தகைத் தண்டனையைப் பெறமாட்டார்கள். இந்த வாய்ப்பு அவர்களுக்கு உண்டு.

எட்வர்ட் உரிமைகளைக் காப்பதற்கென்று ஒரு கழகமுங் காணப்பட்டது. பிஷப்புக்கள் வாய் பொத்திக் கொண்டார்கள். எட்வர்ட் மன்னர் பதவியைத் துறந்த பின்னரும் - அவர் பிரிட்டனில் இல்லாத நேரத்திலும் - அவரிடம் அந்நாடு பரிவு காட்டியது போற்றற்குரியது. எட்வர்டின் செல்வாக்கு, பிஷப்புக்களுக்கும் மற்றவர்களுக்கும் செவ்வனே விளங்கலாயிற்று. பெருஞ் செல்வாக்குப் பெற்றுள்ள ஒருவர், தஞ் செல்வாக்கை யுன்னிக் கலாம்விளைக்கப் புகாது, மகிழ்ச்சியுடன் அரசு துறந்ததின் பெருந்தகைமையை என்னென்று கூறுவது ?

அந்நிலையில் கிறிஸ்து பிறந்த திருநாள் உற்றது. பிரிட்டன் வின்ஸர் கோமகனாரை மறக்கவில்லை. வாழ்த்துரைகளும் அன்பளிப்புகளும் பறந்தன. மேரி ராணியார் தம் அருமை மைந்தருக்கு ஐந்தாம் ஜார்ஜ் மன்னரின் உருவப் படத்தை அனுப்பினார். திரு. லாயிட் ஜார்ஜ் ஒரு தந்திச்செய்தி விடுத்தார். அதன் கருத்து வருமாறு:

பழைய அமைச்சனின் கிறிஸ்த்மஸ் வாழ்த்து. என்றும் தங்கள்பால் சிறந்த மதிப்புடையேன் ; நிறைந்த அன்

புடையேன். தங்களுக்கு விளைக்கப்பட்ட சிறுமைக் கயமை நிகழ்ச்சிகளைக் குறித்து வருந்துகிறேன்; கோழைகளின் செயல்களை வெறுக்கிறேன். குடி மக்களின் உள்ளங் கவர்ந்த ஒரு மன்னரைப் பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இழந்ததனால் நேர்ந்த நஷ்டம் அளப்பரிது.

## மீண்டும்

மீண்டும் சூழ்ச்சிகள் எழுந்தன. சூழ்ச்சிகள் எத்துணையோ உருவங் கொண்டெழுந்தன. திருமணத்தைத் தடுக்கச் சூழ்ச்சிகள் செய்யப்பட்டன. அவைகளெல்லாம் இரும்புண்ட நீராயின. உண்மை கடைப்பிடித்தொழுகுவோரிடம் எந்தச் சூழ்ச்சியும் ஒன்றும் செய்யா. நேர்மை யற்றுப் பதவி மோகங் கொண்டு பொய்மையில் உழல்வோரைச் சூழ்ச்சி ஆட்சி புரியும். அவரிடம் அது தன்னாணை செலுத்தும்.

பிரபுக்களின் இகலும், பிஷப்புக்களின் குறும்பும், மந்திரிசபையின் கரவும் எட்வர்ட் எண்ணத்தை மாற்றினவா? அவர்தம் காதலைத் தவிர்த்தனவா? அவை சாம்ராஜ்யத்தை விடுத்து விலகுமாறு எட்வர்டைச் செய்யவில்லையோ என்று சிலர் கேட்கலாம். சாம்ராஜ்யம் என்றும் நின்று நிலவுவதன்று. அது நீர்க்குமிழி போன்றது. உலகில் எத்தனையோ சாம்ராஜ்யங்கள் அழிந்தன. அக்கதைகள் பல உண்டு. காதலோ சாம்ராஜ்யம் போன்றதன்று. அஃது அழியாதது. அது மேலும் மேலும் வளர்ந்து மறு உலகத்திலுந் தொடர்ந்து செல்வது. அஃது உடலளவில் நிற்பதன்று; ஊன்கடந்து உயிர்கடந்து அழியா இன்பமாவது. அதைப் பிடுங்கல் எவரால் இயலும்?

## திருமண முயற்சி

திருமதி ஸிம்ஸனது மணவிலக்கு வழக்கை யொட்டிய ஆறுமாதத் தவணை 1937-மே-3ம் நாளுடன் முற்றுப் பெற்றது. அக்கால எல்லை முற்றுப் பெற்றதும் மணவிலக்கு உறுதிசெய்யப் பெற்றது. திருமதி ஸிம்ஸன் திருமதி வாலிஸ் வார்பீல்ட் ஆயினர். (வார்பீல்ட் என்பது அம்மையாரின் தந்தையார் பெயர்.)

வின்ஸர் கோமகனும் திருமதி வாலிஸ் வார்பீல்டும் டூர்ஸ் என்னுமிடத்தில் சந்தித்து மகிழ்வெய்தினர். ஜூன் மூன்றும் நாள் திருமணம் குறிக்கப்பெற்றது. திருமணச் செய்தி பிரிட்டனுக்கு எட்டிற்று; எட்டியதும் பிஷப்பு உலகம் எரியலாயிற்று. மன்னரா யிருந்த ஒருவர் பெருந்தகைமையுடன் அரசைத் துறந்த பின்னரும், பிஷப்புலகம் காழ்ப்புக்கொண்டு கனன்றதெனில், அவ்வுலகின் நிலை நன்கு புலனாகிறதன்றோ ?

திருமணம் பிரான்ஸிலுள்ள ஓர் ஆங்கிலக் கிறிஸ்துவக் கோயிலில் நடாத்த ஏற்பாடு செய்யப்பட்டது. அதைத் தடுக்க லண்டன் பிஷப் புறப்பட்டார். அக்கோயில் அவர்தம் ஆட்சியின் எல்லைக்கு உட்பட்டதாம். அவர், திருமணவினை நிகழ்த்த இசைந்திருந்த ஜார்டன் பாதிரியார்மீது பாய்ந்தார். ஜார்டன் பாதிரியார் மணவினை நிகழ்த்தல் கூடாது என்று லண்டன் பிஷப்பு கட்டளை யிட்டார். இவர் அன்புக் கிறிஸ்துவின் அடியவராம்! சுவிசேஷப் பிரசாரகராம்! வெட்கம்! வெட்கம்!

"உங்கள் சத்துருக்களில் அன்பு கூருங்கள் ; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களைச் சபிக்

கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காக ஜெபம் பண்ணுங்கள். உன்னை ஒரு கன்னத்தில் அறைகிறவனுக்கு மறு கன்னத்தையுந் திருப்பிக் கொடு"

—லூக்கா : 6 : 27 - 9.

இவ்வாறு சுவிசேஷஞ் சொல்கிறது. பிஷப்போ அதற்கு மாறுபட்டு நடக்கிறார். சம்பிரதாயப் பேய்க்கும் சட்டதிட்டப் பூதத்துக்கும் பிஷப்பு இரையாகிறார்! பாவம்! அவர் நிலை இரங்கத்தக்கது!

ஜார்டன் பாதிரியார் கிறிஸ்துவின் அடியவர்; சுவிசேஷத்தின் பொருளில் ஒன்றி நிற்பவர்; அஞ்சா நெஞ்சினர். அவர், "யான் எவர்க்குங் கடமைப்பட்டவனல்லன்; என் மனச்சான்று வழியே நடப்பேன்" என்று உறுதி கொண்டு திருமண வினையில் தலைப்பட்டார். திருமணம் எளிய முறையில் சிறப்பாக நடைபெற்றது. வாழ்த்துக்களும் ஆசிகளும் ஆயிரக் கணக்கில் வந்து குவிந்தன.

## வின்ஸர் கோமகளார்

திருமதி வாலீஸ் வார்பீல்ட் வின்ஸர் கோமகளானார். வின்ஸர் கோமகனாரும் வின்ஸர் கோமகளாரும் மனமொன்றிய காதலராகி அன்றில் அகன்றிலென இன்பந் துய்த்து வருகிறார். அவர் நீடு வாழ்க.

திருமதி வாலீஸ் வார்பீல்டின் எண்ணம் ஈடேறவில்லையென்றும், அவர் சாம்ராஜ்ய மகாராணியாகாமல் ஒரு கோமகளாரே யானாரென்றும், அவர் தம் வாழ்வில் ஏமாற்றமே நேர்ந்ததென்றும் சிலர் எண்ணலாம். அவ்வாறு எண்ணுதல் தவறு என்பது எனது கருத்து.

திருமதி வார்பீல்ட், எட்வர்ட் என்னும் மனிதரை நேசித்தாரா - அல்லது ஒரு சாம்ராஜ்யத் தலைவர் என்ற முறையில் அவரை நேசித்தாரா - என்பதை உன்னுதல் வேண்டும். சாம்ராஜ்யத் தலைவர் என்ற முறையில் திருமதி வாலிஸ், எட்வர்டை நேசித்திருக்கமாட்டார் என்றே கூறலாம். ஏன் ? சாம்ராஜ்யத் தலைவர் என்ற முறையில் திருமதி வாலிஸ், எட்வர்டை நேசித்திருந் தால், எட்வர்டினிடமிருந்து சாம்ராஜ்யத் தலைமை கழன்றதும் திருமதி வாலிஸின் நேயமும் கழன்றிருத் தல் வேண்டும். சாம்ராஜ்யத் தலைமை போன பின் னரே திருமணம் நடைபெற்றது. ஆதலால் திருமதி வாலிஸ், எட்வர்ட் என்னும் மேன்மகனையே நேசித் தார் என்று கோடல் வேண்டும்.

சாம்ராஜ்ய எட்வர்ட் பெரியவரா ? தற்போதைய எட்வர்ட் பெரியவரா ? எத்தனையோ சாம்ராஜ்யத் தலை வர்களின் பெயர்கள் மறைந்தன. இராமர், புத்தர் போன்றவர்களின் பெயர்கள் மறைகின்றனவா? இல்லை. தற்போதைய எட்வர்ட், இராமர் - புத்தர் போன்றவர் இனத்தில் சேர்ந்துவிட்டார். இச்சிறப்பு வாய்ந்த ஒருவரை மணந்த பெருமை திருமதி வாலிஸுக்குக் கிடைத்தது. இஃது அழியாப்பேறு. வின்ஸர் கோமக ளாரின் தவமே தவம் !

## வழக்குகள்

வின்ஸர் கோமகனார் - கோமகளார் காதலைப்பற்றிச் சில வழக்குகள் நடைபெற்றன. ஒன்று அம்மையார் மணவிலக்குச் செல்லாதென்பது ; மற்றொன்று 'திரு. ஸிம்ஸன் மணவிலக்கு வழக்கில் ஈடுபடாமல் வாளாகிடந்

தமைக்குக் காரணம் அவர் பெரும் பொருள் பெற்றமை' என்று சொல்லிய ஒருவர்மீது திரு. ஸிம்ஸன் தொடுத்த வழக்கு; இன்னொன்று வின்ஸர் கோமகனாரே தொடுத்தது.

முதலவர் வழக்கை நடத்தாது ஒதுங்கிவிட்டார். திரு. ஸிம்ஸனைத் தூற்றியவர் மன்னிப்புக் கேட்டு விடுதலை யடைந்தார். வின்ஸர் கோமகனார் தொடுத்த வழக்கு ஒரு நூலைப் பற்றியது.

திரு. ஜியோபிரே டென்னிஸ் என்பார் வின்ஸர் கோமகனார் - கோமகளார் காதலைப்பற்றி என்ன என்ன வதந்திகள் உலவினவோ அவைகளை யெல்லாம் திரட்டி ஒரு நூலாக்கினார். அது, வில்லியம் ஹீயினிமான் கம்பெனியாரால் வெளியிடப்பட்டது. நூலாசிரியர் மீதும், நூலை வெளியிட்டோர் மீதும் வின்ஸர் கோமகனார் வழக்குத் தொடுத்தார். கோமகனார் வழக்குத் தொடுக்க மனங்கொண்டமைக்குக் காரணம், பொய்ம்மை, சரித்திரக்காரரால் பின்னே மெய்ம்மையாகக் கொள்ளப்படலாகாதென்பதேயாகும். இது கோமகனார் வக்கீலால் நீதி மன்றத்தில் மிகத் தெளிவாக விளக்கஞ் செய்யப்பட்டது.

எதிரிகள் வழக்கை நடாத்த விரும்பினார்களில்லை. அவர்கள் மன்னிப்புக்கேட்கவே துணிவுகொண்டார்கள். அவர்கள், தங்கள் வக்கீல்கள் வாயிலாக - நூலின் உள்ளுறை வதந்திகளையே கொண்டதென்றும், அதன்கண் மெய்ம்மை யில்லையென்றும், வதந்திகள் பொய்ம்மைப்பட்டால் கோமகனாரின் புனிதம் உலகுக்கு என்றென்றும் விளங்குமென்னும் நோக்கத்துடன் நூல் யாக்கப்

பட்டதென்றும், வெளிவந்த பிரதிகளெல்லாம் திரும்பப் பெற்றுக்கொள்ளப் படுமென்றும், கோமகனுர்க்கு நஷ்டஈடு செலுத்தச் சித்தமென்றும், அவர்க்கு மனமார்ந்த மன்னிப்புச் செலுத்தப் படுமென்றும் நீதிமன்றத்துக்குத் தெரிவித்தார்கள். கோமகனுர் வக்கீலும் மன்னிப்பை ஏற்க ஒருப்பட்டார்.

முதன்மை நீதிபதி லார்ட் ஹீவார்ட்,மன்னிப்புக்கு உடன்பட்டுத் தீர்ப்பில் எதிரிகளைச் சுட்டிக் குற்றம் பெரிதென்றும், அது குதிரைச் சவுக்கடிக்கு உரியதென்றும் கூறினர்.

நஷ்டஈடாகச் செலுத்தப்பட்ட தொகையில் ஒரு காசையாவது வின்ஸர் கோமகனுர் ஏற்றுக்கொண்டாரில்லை. அத்தொகை முழுவதும், கோமகனுர் இளங்கோவா யிருந்தபோதும், மன்னரா யிருந்தபோதும் ஊக்கத்துடன் நடாத்திவந்த சில அற நிலையங்கட்கு அளிக்கப்பட்டது.

பொல்லாத உலகம் ஒரு நல்லாரை எவ்வெவ் வழியில் துன்புறுத்துகிறது பாருங்கள்! துன்பத்தில் இன்பங் காண்பவர் வின்ஸர் கோமகனுர்.

# XIII சீர்திருத்தம்



இதுகாறும் எட்வர்டின் துறவு நிகழ்ச்சியைப் பற்றிச் சிறு ஆராய்ச்சி செய்யப்பட்டது. அவ்வாராய்ச்சியின் தலைப்பு, 'முடியா? காதலா? சீர்திருத்தமா?' என்பது. இம்மூன்றனுள் நடுவணதாய்ச் சிங்கநோக்காய் நிற்பது காதல். அஃது ஒரு நோக்கால் முடியை (எட்வர்டினின்றும்) வீழ்த்தியது; மற்றொரு நோக்கால் சீர்திருத்த உலகை எழுப்பியது. இவ்விரண்டனுள் சிறந்தது, சீர்திருத்த உலகை எழுப்பியதாகும். காதலுக்குத் தடையாக உலகில் எதுவும் நிற்றல் கூடாது. அதற்குத் தடை ஏற்படுமானால் அஃது உலகம் இன்னும் சீர்திருத்த முறவில்லை என்பதை உணர்த்துவதென்றே கொள்ளுதல் வேண்டும்.

உலகம் பல வழியிலுஞ் சீர்திருத்தம் பெறுதற்கு எத்தனையோ நிகழ்ச்சிகள் உற்றன; உறுகின்றன; இன்னும் உறலாம். சரித்திரங்களும் பல சீர்திருத்தங்களை உந்திக் கொண்டிருக்கின்றன. எவ்வளவு பழமை நிகழ்ச்சிகளிருப்பினும், புதுமை நிகழ்ச்சிகளே உலகுக்கு ஊக்கமூட்டும். அஃது உலக இயல்புபோலும்! பழமையைப் புதிப்பிப்பது புதுமை. இரண்டுக்கும் மூலம் ஒன்றே. "முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே - பின்னைப் புதுமைக்கும் பெயர்த்துமப் பெற்றியனே" என்றார் மாணிக்க வாசகனார்.

உலகச் சீர்திருத்தத்தின் பொருட்டு அவ்வப் போது புது நிகழ்ச்சிகள் ஆண்டவனருளாலேயே

உண்டாகின்றன. "அவனன்றி ஓரணுவும் அசையாது". இதையுணர்ந்து நடப்பதே அறிவுக்கு அழகு. எட்வர்டின் துறவு திடீரென நிகழ்ந்தது. திடீர் நிகழ்ச்சி எப்பொழுதும் உலகை வீறிடச் செய்யும். எட்வர்ட் துறவு உலகை எழுப்பியுள்ளது; தட்டி எழுப்பியுள்ளது. அத்தகை எழுச்சியைக் கிளப்புதல் எத்துணையோ நூல்களாலும் இயலாது. எட்வர்ட் துறவு, சீர்திருத்தப் போராட்டத்தை உலகில் எழுப்பியிருக்கிறது. போராட்டம் ஒருவழியிலா நிகழும்? பல வழியிலும் நிகழும்.

எட்வர்ட் துறவு நிகழ்ச்சியை ஆயும் அறிஞர் உள்ளத்தில் எத்துணையோ சீர்திருத்த முறைகள் தோன்றும். அவைகளையெல்லாம் நிரலே கிளந்து கூற வேண்டுவதில்லை. மூலமாகவுள்ள சிலவற்றை மட்டும் ஈண்டுக் குறிக்கலாமென்று எண்ணுகிறேன்.

## (க) காதல் மணம்

உலக வாழ்வு எற்றுக்கு? இன்பம் நுகர்தற்கன்றோ? நேரிய வழியில் உலக இன்பம் நுகர்வது இறையின்பம் நுகர்வதேயாகும். "இறைகளோடிசைந்த இன்பம் இன்பத்தோடிசைந்த வாழ்வு" என்றும், "பண்மயத்த மொழிப்பாவை சங்கிலிக்கும் எனக்கும் பற்றாய பெருமானை மற்றாரை யுடையேன்" என்றும் வன்றொண்டர் அருளியதை நோக்குக.

இன்ப வாழ்வு தனிமையில் கிட்டாது. ஒருத்தியும் ஒருவனும் கூடி வாழ்வதிலேயே இன்பம் உண்டு. கூடி வாழ்தலென்பது உடலளவினதன்று. இரண்டு

உயிர் இருமையற்று ஒருமைப்பட்டு வாழ்வதே கூடி வாழ்வதாகும். உயிரொன்றிய இன்ப வாழ்வுக்கு உடல் கருவியாகத் துணைபுரிவது.

பெண் ஆண் என்னும் ஈருயிரையும் ஒருமைப் படுத்துவது காதல் என்பது. காதல் நிகழ்ச்சிக்கென்று இயற்கை உலகம் நானாவிதக் கோலம் பூண்டிருக்கிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் பிரிவுகளை நோக்குக. இவை காதலின் பொருட்டு இயற்கையில் முகிழ்த்திருக்கின்றன. இவைகளின் புறம் நிலமென்றும், அகம் திணையென்றும் வழங்கப்படுகின்றன. நிலம் பருமை; திணை நுண்மை (திணை - ஒழுக்கம்). காதல் நிகழ்ச்சிக்கெனப் புற நிலமும், அகத்திணையும் இயற்கையில் அமைந்திருத்தலை ஆராய்ந்து உண்மை தெளிக.

காதல் வழி மணம் நிகழ்தல் வேண்டும். காதலற்ற மணம் மணமாகாது. அது பிணம். காதலற்ற வெற்றுடற் சேர்க்கை பெறுவோர் இவ்வுலக வாழ்வில் இறந்தவரே யாவர். அப்பிண வாழ்விலும் நரகம் மேலானது.

காதல்மணம் பெருகப்பெருக உலகம் அன்பாகும்; அமைதியுறும்; நலம் பெறும்; கொலை - களவு - கள் - காமம் - பொய் முதலியவற்றினின்றும் விடுதலை யடையும். காதல் மணம் பிறவி நோக்கத்தை நிறைவேற்றுதற் குரியது.

அத்தகைக் காதல் மணமே உலகில் யாண்டும் நடைபெறுதல் வேண்டும். இல்லையேல் உலகம் பல வழியிலும் நாசமுறும். காதல்மணத்துக்கு எத்தகைத் தடையும் இருத்தல் கூடாது. தடைகளிருந்தால் அவைகளை

உடைத்தெறியவேண்டுவது அறிஞர் கடமை. காதல் மணம், நாடு - மொழி - நிறம் - பிறப்பு - மதம்-பதவி முதலியவற்றைப் பற்றிய கட்டுகளுக்கு அடங்காதது. கட்டுகளையெல்லாங் கடந்து அன்பில் நிகழ்வது காதல் மணம். இதனால் "காதலுக்குக் கண்ணில்லை" என்னும் பழமொழி பிறந்தது போலும்!

காதல் மணத்துக்குத் தடைகள் பலவிடங்களில் இருக்கின்றன. நாகரிகத்தில் முதிர்ந்ததென்று சொல்லப்படும் இங்கிலாந்தில் காதல் மணத்துக்குத் தடையிருக்கிறது! எட்வர்ட் சாம்ராஜ்யப் பதவியை ஏன் துறந்தார்?

இந்தியச் சட்டசபையில் ஒரு முஸ்லிம் சகோதரர், 'ஒரு மன்னர் தாம் விரும்பிய ஓர் ஏழைப் பெண்மணியை மணஞ் செய்துகொள்ளக் கிறிஸ்துவ ராஜ்யம் உரிமையளிக்கவில்லை; இஸ்லாத்தில் அவ்வுரிமை யுண்டு. ஒரு மன்னர் ஓர் ஏழைப் பெண்மணியை மணக்க இஸ்லாம் அநுமதியளிக்கிறது;' என்னுங் கருத்துப்படக் கூறியது இங்கே குறிக்கத்தக்கது. அம்முஸ்லிம் சகோதரரின் பேச்சைப் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தவரும் மற்றவரும் பத்திரிகையில் படித்தேயிருப்பர்.

காதல் மணத்துக்கு உரிமை இருத்தல் வேண்டும். அதைக் கட்டுப்படுத்தச் சட்டதிட்டம் எற்றுக்கு? சம்பிரதாயம் எற்றுக்கு? பிற தளைகள் எற்றுக்கு? அவைகளெல்லாம் தகர்க்கப்படல் வேண்டும். அவைகளைத் தகர்க்கச் சீர்திருத்தக்காரர்கள் எழுவார்களாக. காதல் மணத்துக்கென்று ஒரு பெரிய சாம்ராஜ்யத் தலைவர் தமது பதவியையே தியாகஞ் செய்தார். அவர் தமக்

கென்றுமட்டும் அத்தியாகஞ் செய்தாரில்லை; உலகத்துக் கென்றுஞ் செய்தார். உலகம் அதை உணர்ந்து நடப்பதாக. ஆதலால் உலகமெங்குங் காதல் மணங் கமழச் சீர்திருத்த நேயர்கள் உழைப்பார்களாக.

## (உ) பிரபுக்கள் கூட்டம்

உலகில் பிரபுக்களென்றும் ஏழைகளென்றும் இருத்தலால், வாழ்வில் பலதிறச் சிக்கல்கள் ஏற்படுகின்றன. ஏழை பணக்கார வேற்றுமை மக்கள் உரிமையைப் பாழ்படுத்துகிறது. அவ்வேற்றுமை, காதல் மணத்துக்குங் கேடு சூழ்வதைக் காண்கிறோம். எட்வர்ட் துறவை உன்னுங்கள். மண உரிமையைக் கடிவது நாகரிகமா என்பதையும் உன்னுங்கள். ஏழை பணக்கார வேற்றுமையுள்ள வரை உலகில் துன்பம் நீங்காது. பிரபுக்களுங் கவலையின்றி வாழ மாட்டார்கள். கவலைக்கு விதை விதைப்பது ஏழை பணக்கார வேற்றுமை என்று கூறல்மிகையாகாது. இங்கிலாந்தில் அவ்வேற்றுமை யுண்மையான், மன்னர் ஓர் 'ஏழை மகளை' மணஞ் செய்து கொள்ளப் பிரபுக்களின் மனம் ஒருப்படவில்லை. பிரபுக்களும் மனிதர்களே. அவர்களுக்கென்று பிறப்புவழி வேறேயில்லை. அவர்களைக் கெடுப்பது செல்வச் செருக்கே யாகும். செல்வத்தின் புன்மையை உணர்த்தவும் எட்வர்ட் பெரிய சாம்ராஜ்யச் செல்வத்தைத் துறந்து காட்டினார். பிரபுக்களுலகம் இனியாதல் சீர்திருத்தம் உறுமா? அவ்வுலகம் சீர்திருத்தம் பெறுதல் வேண்டும்.

பிரபுக்களுலகை இருவழியில் சீர்திருத்தஞ் செய்யலாம். பிரபுக்களின் இருண்ட உள்ளத்தில் ஜீவ காருண்ய விளக்கை ஏற்றும் வழி ஒன்று; மற்றொன்று

பொருள் நிலையைச் சமப்படுத்துவது. முன்னது தொன்று தொட்டு நிலவுவது. அஃது இடைநாளில் பிரபுக்கள் உலகினின்றும் பட்டொழிந்தது. அக்காலந் தொட்டே பிரபுக்கள் உலகம் ஏழையுலகைத் தொல்லைப் படுத்தத் தொடங்கியது. அத்தொல்லை காரணமாகப் பொருளாதார சமரச இயக்கம் உலகில் தோன்றலா யிற்று. ஜீவகாருண்ய முறையில் பிரபுக்களுலகம் திருந்த இசையாதொழியின், பொருள் நிலைச் சமத்துவ முறை கால் கொண்டே தீரும். சீர்திருத்தக்காரர் முத லில் ஜீவகாருண்ய முறையைக் கையாண்டு பார்ப்பது அறம். இது காந்தியடிகள் வழி.

## (ந) பிஷப் உலகம்

பிஷப் உலகம் என்பது பொதுவாகப் புரோகித உலகம் என்று வழங்கப்படுகிறது. புரோகித உலகம், பெரிதுஞ் செல்வ உலகிலும், அரசியல் உலகிலும் உறவு கொண்டு உழல்வதால் தெய்வ உலகை மறந்தே விடுகி றது. அவ்வுலகம் தெய்வத் தொண்டுக்கென ஏற்பட் டது. அது தெய்வத்தை மறந்தால் உலகம் எந்நிலை எய்தும்? காண்டர்பரி ஆர்ச் பிஷப்பும் மற்றவரும் எட் வர்டைப் பலவழியிலுந்தொல்லைப் படுத்தினரல்லரோ? எட்வர்ட் நல்லவராதலால் எதிர்ப்பில் தலைப்பட்டா ரில்லை. அவர் எதிர்ப்பில் தலைப்பட்டிருந்தால் பிரிட்டன் நிலை என்னவாயிருக்கும்?

சரித்திர உலகை நோக்கினுல் புரோகித உலகின் கொடுமை நன்கு புலனுகும். புரோகித உலகால்அழிந்த ராஜ்யங்கள் பல; சமூகங்கள் பல; கலைகள் பல; நாக ரிகங்கள் பல. எக்காரணம் பற்றிப் புரோகித உலகம்

ஏற்பட்டதோ அக்காரணம் பற்றி அவ்வுலகம் இப்பொழுது இயங்கவில்லை. அதனால் அவ்வுலகம் தொல்லை விளைத்து வருகிறது. புரோகித உலகம் இனிச் சீர்திருத்தம் பெறல் வேண்டும்; இல்லையேல் அஃது ஒழிதல் வேண்டும்.

சீர்திருத்த முறைகளைப் பலபடக் கூற வேண்டுவதில்லை. புரோகித உலகம் அறவாழ்வைச் செலுத்தக் கடமைப் படல்வேண்டும். அவ்வுலகம் பொருள் நசைக்கு இரையாதல் கூடாது. அன்றாட வாழ்வுக்குச் சிறு பொருளிருத்தல் சாலும். நாளைக்கென்று பொருள் தேடும் எண்ணம் அவ்வுலகில் இருத்தலாகாது. பொருள்நசை காரணமாகவே புரோகித உலகம் தீய வழிகளில் புகுகிறது. அந்நசையற்றால் அது தூய்மையுறும். எளிமையை விரும்பாதவர் புரோகிதராகாது ஒதுங்குவது நல்லது. தெய்வக் கலைகளை ஓம்புவதில் புரோகித உலகம் புகுதல் சிறப்பு. எக்காரணம் பற்றியும் அவ்வுலகம் அரசியற் சேற்றிலுங் கட்சிப் பிணக்குகளிலும் வீழ்ந்து நெளிதல் கூடாது. புரோகித உலகம் சீர்திருத்தத்துக்கு உடன்படல் வேண்டும்; இல்லையேல் அதுமறையும் நிலை நேரும். சீர்திருத்த உலகம் நன்முறையில் முயன்று தீமைகளைக் களைவதாக.

## (ச) மன்னர் சார்பு

இங்கிலாந்தில் ஒரு மன்னர் இறந்ததும் அவர்வழி வந்த மற்றொருவர் மன்னராகிறார். அவர் மன்னராகிச் சில நாள் கடந்த பின்னரே முடிசூட்டுவிழா நடைபெறுகிறது. இச்சம்பிரதாயம் மாறுதல் வேண்டும். ஒருவர் இறந்து மற்றொருவர் மன்னராயதும் அவர் முடிசூடப்

பெறல் வேண்டும். ஜனப்பிரதிநிதிகள் சார்பில் முதல் மந்திரி மன்னருக்கு முடி சூட்டலாம். அதில்பிஷப்பின் தலையீடு வேண்டுவதில்லை. முடிசூட்டுக்கெனத் தனி விழா அநாவசியம். முடி இராஜ்ய பாரத்துக்கோர் அறிகுறி. ஒருவர் மன்னராயதும் அவர்மீது இராஜ்ய பாரம் பொருந்தி விடுகிறது. பின்னே சில நாள் கடந்து அதன் அறிகுறியாகிய முடியை மன்னருக்கு என் சூட்டுதல் வேண்டும்? எக்காரணம் பற்றியோ ஒரு போது ஏற்பட்ட சம்பிரதாயம் இந்நாளில் எற்றுக்கு? இதைக் குழப்பத்தின்போது கர்னல் வெட்ஜ்வுட் பார்லி மெண்டில் நன்கு விளக்கிக் காட்டினர். அவர் பேசிய தன் சாரம் முன்னர் எடுத்துக் காட்டப்பட்டது

ஒருவர் இராஜ்யபாரத்தைத் தாங்கிய பின்னர்ச் சிலநாள்கடந்து முடிசூட்டுவிழா நடைபெறலும், அதில் பிஷப் தலையிடுதலும், முடிசூட்டைப் பற்றிய பழைய சம்பிரதாய வழக்க வொழுக்கங்களை மேற்கொள்ளலும் ஒழிந்தால் மன்னருக்கும் பிஷப்புக்குமுள்ள அரசியல் தொடர்பு அறுந்தேபோகும். அந்நிலை நேர்ந்தால், "முடி சூட்டு விழாவில் கலந்து கொள்ளேன்" என்று காண்டர்பரி ஆர்ச்பிஷப் மன்னரை அச்சுறுத்தல் இயலுமோ? எனவே, இங்கிலாந்தில் மன்னர் சார்பில் இம்மாறுதல் செய்ய ஆங்குள்ள அறிஞர்கள் வீறுகொண்டெழுவார்களாக.

எட்வர்ட் காதல், உலகில் சீர்திருத்த வேட்கையை எழுப்பி யிருக்கிறது. சீர்திருத்த உலகம் எட்வர்டுக்குத் தலைமை வழங்குவதாக. காதல் வெல்க; சீர்திருத்தம் பெருக.

# XIV இறுவாய்

உலகம் நல்லதா ? தீயதா ? உலகம் நல்லதென்று சொல்வோரும் உளர்; தீயதென்று சொல்வோரும் உளர். நன்மையும் தீமையும் உலகில் இல்லை. இரண்டுக்கும் இடம் உள்ளமே. நலம் நிகழும் உள்ளத்துக்கு உலகம் நல்லதாகவே தோன்றும்; தீமை நெளியும் உள்ளத்துக்கு உலகம் தீயதாகவே தோன்றும்.

உயிர்களின் விடுதலைக்கென்றே உலகவாழ்வு ஆண்டவனால் நல்கப்படுகிறது. அறவழியில் நின்று, பொருளீட்டி, இன்பம் நுகர்ந்து உலகில் வாழ்வோர், நல்லுள்ளம் பெற்று, உலகை நல்லதாகவே கண்டு, விடுதலை எய்துவர். ஏனையோர் நல்லுள்ளம் பெறாது, உலகைத் தீயதாக் கண்டு, விடுதலை எய்தாதொழிவர். விடுதலைக்கு அறவழியில் நின்று பொருளீட்டி இன்பம் நுகரும் நல்வாழ்வு வேண்டற்பால தென்பது இயற்கை நியதி.

அறநெறி, மனமாசை அகற்றி, அன்பை வளர்த்து, உலகை இறையாக உணர்த்தும். மற்ற நெறி, மனமாசை அகற்றாது, ஆசையை வளர்த்து, உலகைப் பேயாகக் காட்டும். இறையுலகில் பொறுமை, அமைதி, அருள், தியாகம் முதலியன நிலவும்; பேயுலகில் பொறாமை, பரபரப்பு, வன்கண், தன்னலம் முதலியன உலவும்.

## வாழ்வில் வெற்றி

உலக வாழ்வைக் கருவியாக் கொண்டு விடுதலை பெறுதல் வேண்டும். அதுவே வாழ்வில் விளையும்

வெற்றியாகும். வெற்றி வாழ்வு பெறுதார்க்குத் துன்பம் பெருகிக் கொண்டே போகும்.

வாழ்வில் வெற்றி என்றால் என்ன? செல்வம் பதவி முதலியவற்றில் மேம்பட்டுச் செல்வது வாழ்வில் வெற்றி என்று கருதப்படுகிறது. அவைகளில் மேம் பட்டுச் செல்லாமை வாழ்வில் தோல்வி என்று கருதப் படுகிறது. இம்முறையில் வாழ்வில் வெற்றி தோல்வி கருதுவது அறமாகாது.

மேம்பாடெல்லாம் மேம்பாடாகா. அவைகளை இருகூறு படுத்தலாம். ஒன்று, அன்புத் தெய்வத்துக்கு ஆளாகிச் செல்வம் பதவி முதலியவற்றில் மேம்பாடுறு வது; மற்றொன்று, ஆசைப் பேய்க்கு அடிமையாகிச் செல்வம் பதவி முதலியவற்றில் மேம்பாடுறுவது. முன் னையதில் சேவை பெருகும்; பின்னையதில் தன்னலம் பெருகும். சமயம் நேரும்போது முன்னையதில் தியாகம் இடம் பெறும்; பின்னையதில் அஃது இடம் பெறாது. சேவையும் தியாகமும் ஒன்றிய வாழ்வில் விளைவதே வெற்றியாகும்.

ஒவ்வொருவர் வாழ்விலும் ஒவ்வொரு போது எவ் வழியிலாதல் சோதனை நேரும். சோதனை, தான் விளங்கு முறையில் நிகழ்வதும் உண்டு; விளங்கா முறையில் நிகழ் வதும் உண்டு. சோதனை எம்முறையில் நிகழினும், அஃது அன்பு ஆசை என்னும் இரண்டையும் குறிக்கொண்டு நிகழும். செல்வம் பதவி முதலியன அன்பால் வகிக் கப் படுகின்றனவா அல்லது ஆசையால் வகிக்கப் படு கின்றனவா என்னுஞ் சோதனை எழுகிறது. சோதனையில் சேவையும் தியாகமும் முன்னின்றால் வாழ்வில் வெற்றி

என்றும், தன்னலமும் அவாவும் முன்னின்றால் வாழ்வில் தோல்வி என்றும் கோடல் வேண்டும்.

அன்பால் செல்வம் பதவி முதலியவற்றில் மேம்பாடுறுவோரிடம் சேவையும் தியாகமும் உண்மையான், அவர் எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணராகிறார். ஆசையால் செல்வம் பதவி முதலியவற்றில் மேம்பா டுறுவோரிடம் தன்னலமும் அவாவும் இருத்தலான், அவர் உயிர்கட்குத் துன்பஞ் செய்யும் அரக்கராகிறார். இவ்வரக்கர் எங்ஙனம் வாழ்வில் வெற்றி பெற்றவராவர்? எவ்வுயிரையும் தம்மைப்போல் கருதி, அவ்வுயிர்க்குச் செந்தண்மை பூண்டொழுகும் அந்தணராவோரே வாழ்வில் வெற்றி பெற்றவராவர்.

## வின்ஸர் கோமகனார் வாழ்வு

வின்ஸர் கோமகனார் வாழ்வு வெற்றியுடையதா? தோல்வியுடையதா? வின்ஸர் கோமகனார் ஒரு பெரும் மன்னர் வழி வந்தவர்; இருபத்தைந்தாண்டு இளங்கோவாக இருந்தவர்; ஏறக்குறைய ஓராண்டு மன்னராகவும் வீற்றிருந்தவர். இவ்வளவில் அவர் தம் வாழ்வு நின்றிருந்தால், அவர் வாழ்வில் வெற்றி பெற்றவரா, தோல்வியுற்றவரா என்று அளந்து கூறல் அரிதேயாகும். வின்ஸர் கோமகனார் வாழ்வில் சோதனை எழுந்தது. அவர் திடீரென முடி துறந்தார். சோதனை, 'சாம்ராஜ்யச் செல்வப் பதவியை எட்வர்ட் அன்பால் ஏற்றிருந்தாரா? அல்லது ஆசையால் ஏற்றிருந்தாரா' என்பதைக் குறிக்கொண்டே எழுந்தது. எட்வர்ட் முடி துறந்து தியாக மூர்த்தியானமையால், அவர் அன்பு வழிநின்றே செல்வப் பதவியை ஏற்றிருந்தார் என்னும் உண்மை உலகுக்கு விளங்கலா

யிற்று. ஆகவே வின்ஸர் கோமகனார் வாழ்வு வெற்றி யுடைய தென்க.

வின்ஸர் கோமகனார் வாழ்வு வெற்றிக்கோர் அறி குறி. அவர்தம் வாழ்வை நிராசை என்னுந் தெய்வம் நடாத்துகிறது. அவரது வாழ்வை ஓர் எடுத்துக் காட்டாக உலகங் கொள்வதாக.

எட்வர்டின் துறவுக்குப் பலர் பல காரணங் கூறுப. அவைகளிற் சிறந்தன இரண்டு. ஒன்று அகக் காரணம்; மற்றொன்று புறக்காரணம். அகக்காரணம் எட்வர்ட் தொழிலாளர் தோழரானமை; புறக்காரணம் அவர் தொழிலாளர் தோழராகிய ஓர் அணங்கைக் காதலித்தமை. இவையிரண்டும் ஆசை யுலகை விதிர் விதிர்க்கச் செய்தன. அன்புத் தெய்வத்துக்கும் ஆசைப் பேய்க்கும் போர் மூண்டது. அன்புத் தெய்வமே வெற்றி பெற்றது. ஆசைப் பேய் தோல்வி யடைந்தது. எட்வர்ட் எவர்க்குந் தீங்கு நேராத முறையில் அரசைத் துறந்தார்; பெண்ணணங்குக்கு அளித்த உறுதிமொழிப்படி அவரை மணஞ் செய்தார்; இப்பொழுது தொழிலாளர் நலன் கருதி உழைத்து வருகிறார். அவர் சோதனையில் வெற்றி பெற்றவரானார். அவர் மனிதரில் மனிதரானார்; அந்தணரானார்; அறவோரானார்; ஆண்டகையரானார்.

## செம்மை நலங்கள்

வின்ஸர் கோமகனார் வாழ்வு அறிவுறுத்துஞ் செம்மை நலங்கள் பல. அவைகளுள் சிறப்பாகக்குறிக்கத்தக்கன சில. அச்சில, அன்பு வழியில் செல்வப்

பதவி யேற்றல், ஏழைகட்கிரங்கி நலஞ் செய்தல், பெண்ணுடன் வாழல், பெண்ணின் பொருட்டு எதை யுந் துறத்தல், தியாகம், அஞ்சாமை, உறுதிமொழி காத்தல், தீமையை எதிர்த்து நில்லாமை, பகைமை பாராட்டாமை, வன்மங் கொள்ளாமை, எளிமையில் நாட்டம், உரிமையில் வேட்கை, சேவையில் உள்ளம், நேர்மை, சீர்திருத்தம், சமநோக்கு முதலியன. வின்ஸர் கோமகனார் வாழ்வு திருவள்ளுவர் நூலுக்கு ஓர் இலக் கியம் என்று சுருங்கச் சொல்லலாம். அவர்தம் செவ் விய குணங்கள் மன்பதையில் படிக; பெருக; வாழ்க.

ஓர் உறுதி மொழியின் பொருட்டு ஒரு பெருஞ் சாம்ராஜ்யச் செல்வத்தைத் துறந்த தியாக மூர்த்தியை- ஒரு பெரியாரை - இந்நாளைய உலகம் பெற்றிருக்கிறது. அவரை ஈன்ற வயிறு திருவுடையது. அவரால் உலகம் நலம் பெறுவதாக; சமரச ஞானம் பெறுவதாக.

வாழ்க உலகம்; வேல்க நல்லறம்

—திரு. வி. க.

